# இளமை துள்ளும் வண்ணங்கள்





பள்ளிக்குச் சென்றால் ஆனந்தம்
புதிய ஃபெவிக்ரில்
ஸ்டூடன்ட்ஸ் போஸ்ட்டர்
கலர்கள் இருந்தால் ஆனந்தம்
பேரானந்தம்!
வண்ணமோ வண்ணம்
அழகான வண்ணம்
பச்சைக் கிளிபோல்
பளிச்சிடும் வண்ணம்
கண்ணைப்பறிக்கும் சிகப்பு, நீலம்
பால்போல்
வெண்மை, பனிபோல் மென்மை
இன்னும் என்ன யோசனை?!!
படங்களை உடனே கையில் எடுப்பீர்
புதிய ஃபெவிக்ரில்
ஸ்டூடன்ட்ஸ் போஸ்ட்டர் கலர்களை
தீட்டுவீர்! பரவசம் அடைவீர்!





(அம்மாவைக் கண்டு மிரளாதீர் கைவண்ணம் பார்ப்பார்,
விலையைக் கேட்டார் அசந்தே போவார்!)

## இலவசம்

பெயின்ட்-எ-போஸ்ட்டர்
இம்முகவரிக்கு எழுதிப் பெறவும் :
ஃபெவிக்ரில், போஸ்ட் பாக்ஸ் 17401,
அந்தேரி (கிழக்கு), பம்பாய்-400 059.

புதிய
**ஃபெவிக்ரில்®**
ஸ்டூடன்ட்ஸ்
போஸ்ட்டர் கலர்கள்








everest/91/PIL/117 tm

பெயர் ______ வயது ______
முகவரி ______
______
பள்ளிக்கூடம் ______

CDM






# நட்சத்திரகுறி

முதலில், பைத்தியக்காரன் வாஸோவிச்சின் மர்மத்திற்கான விடை இதோ. 'நியூஸிட்டி' எப்படி காப்பாற்றப்பட்டது? விபுல் UFO-விலிருந்து கடிகாரத்தை மாற்றியிருக்கக் கூடுமோ? ஆம், நடந்தது அதுதான். சபாஷ், நண்பர்களே..

பிரபலமான 'மோனார்க்' வைரங்கள் 'ஸ்டேட் மியூஸிய'த்திலிருந்து களவு போய் விட்டன. நட்சத்திரகுறி கொண்ட ஷூவின் சுவடுதான் ஒரே தடயம். இதைப் பின்பற்றி துப்பறியும் புலிகள் 'மாஸ்டர் கேவ்' வந்தடைகிறார்கள். பின்னர்..

ரால்ஃபின் யோசனைப்படி, துப்பறியும் புலிகள் தம் BSA SLR களில் வேகமாக மியூஸியத்திற்குச் சென்றனர்.

"வாட்ச்மேனிடம் பேசிப் பார்ப்போம்" என்றான் விபுல். ஆனால் அந்த தடித்த மனிதன் அதற்கு இணங்கவில்லை. களவு நடந்த இடத்தில் விபுல் மியூஸியம் பணியாளர் பாட்ஜ் ஒன்றைக் கண்டெடுத்தான். ஏன் அந்த வாட்ச்மேன் பாட்ஜ் அணியாமலிருந்தான்? அவனது மீசை இடதுபக்கம் தொங்கியவாறு இருந்ததை பூஜா கவனித்தாள். அது பொய் மீசையாகத் தான் இருக்கும் என்றான் விபுல்.

### ரிச்மண்ட் கடற்கரை

"இதோ பார் நட்சத்திரகுறிகொண்ட ஷூவின் சுவடு" என்று கத்தினான் விபுல். போலிஸைக் கூப்பிட தன் BSA யில் விரைந்தான் ரால்ஃப். மற்ற இருவரும் ஷூவின் சுவட்டைப் பின்பற்றி மாஸ்டர் கேவ்



அடைந்தனர். என்னது அது? நட்சத்திரகுறி கொண்ட ஒரு ஷூ! சில அடிகளுக்கப்பால் பூஜா ஒரு பொய் மீசையைக் கண்டெடுத்தாள்.

### குகையினுள்

இருண்ட குகையினுள் குரல்கள் திடீரென முழங்கின. தம் BSA SLRகளை சத்தமின்றி நிறுத்தி, துப்பறியும் புலிகள் பதுங்கினர். "இன்னும் 15 நிமிடங்களில் படகு துறைக்கு வந்து சேரும்" என்றொரு குரல் முழங்க, "தலைவர் மகிழ்ச்சியடைவார்" என்றது மற்றொன்று.

ரால்ஃபும் போலீஸும் இன்னும் வரவில்லையே! விபுல் தன் BSA SLR ல் கயவரைத் தொடர, பூஜா காத்திருந்தாள். சற்று நேரத்தில் வந்து சேர்ந்த ரால்ஃபையும் போலீஸையும் பூஜா படகுத் துறைக்குக் கூட்டிச் சென்றாள். சிறிது நேரத்திற்குப் பின்,




# கொண்ட ஷூ ஷூன் மர்மம்

கொள்ளைக்கும்பல் பிடிபட்டது. ஷூ, மீசை இவற்றை கொள்ளைக் கும்பலைச் சேர்ந்த ஒருவனிடம் நீட்டி, "உங்கள் தலைவனிடம் எங்களை கூட்டிப் போ!" எனக்கட்டளையிட்டாள் பூஜா. "இது காரியத்தை மேலும் சுலபமாக்கும்" என்றான் விபுல், மியூஸியம் பணியாளர் பாட்ஜைக் கொடுத்தவாறு. தலைவன் யார்? அது மியூஸியம் வாட்ச்மேன் தான். ஆம்.

தெய்வங்களின் தீவின் மர்மம், பறவை வேடர்களின் மர்மம் எனும் மர்மங்களுடன் உங்களை மீண்டும் நாங்கள் சந்திப்போம். அதுவரை உங்கள் BSA SLR களில் துப்பறியச் செல்வீர்!



**BSA SLR**

*Get Set'n'Go on an adventure*

DIFFERENT COLOUR COMBINATIONS ● THE ONLY INTERNATIONAL QUALITY ERASER IN INDIA ● PLEASANTLY SCENTED ● WATCH OUT FOR MR CLEAN NEW 14 ROBOT ERASER SERIES ● FOOTBALL ERASER ● AVAILABLE IN 24 DIFFERENT COLOUR COMBINATIONS ●

Mr. Clean

*My Little Darling,*

Mr. Clean

# WELCOME TO THE WONDERFUL WORLD OF ERASER

LOVE

HIT A CLEAN  SIX



WITH **CRICKET ERASER SET**

SALES PROMOTIONAL & EXPORT ENQUIRIES SOLICITED




A Product Of **FUN-TIME INC.**

502, NIRANJAN BUILDING, 99, MARINE DRIVE, BOMBAY-400 002. TEL: 317186, 318351, 310258

THE DOUBLE 'A' COMPANY

● WATCH OUT FOR MR CLEAN NEW 14 ROBOT ERASER SERIES ● FOOTBALL ERASER ● AVAILABLE IN 24 DIFFERENT COLOUR COMBINATIONS ●

THE ONLY INTERNATIONAL QUALITY ERASER IN INDIA ● PLEASANTLY SCENTED ● WATCH OUT FOR MR CLEAN NEW 14 ROBOT ERASER SERIES ● FOOTBALL ERASER AVAILABLE IN 24

# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## தோல்விக்கு குறுக்கு வழி!

அண்மையில் ஒரு தேசிய தினசரிப் பத்திரிக்கை ஒரு கேலிச் சித்திரத்தை வெளியிட்டிருந்தது. அதில் சில அரசியல் கட்சித் தலைவர்கள் ஒன்றாக உட்கார்ந்து தேர்வு எழுதுவதுவது போலவும் அவர்களது விடைத் தாள்களில் ஒரே மாதிரியான விடை எழுதப்பட்டிருந்தது போலவும் காட்டப்பட்டிருந்தது. இதுதான் 'ஒட்டு மொத்தக் காப்பி அடித்தல்' எனப்படுவது.

தற்போது இச்செய்தி முக்கியத்துவம் வாய்ந்தது. ஏனெனில் அண்மையில் பல தினசரி செய்தித் தாள்களில் மாணவர்கள் தம் இறுதித் தேர்வுகள் எழுதுகையில் பல இடங்களில் இம்மாதிரி ஒட்டு மொத்தக் காப்பி அடித்தல் நடந்ததாக செய்திகள் வெளி வந்தன. வினாக்களுக்கு விடை அளிக்கப் பாடப் புத்தகங்களையும் அவற்றின் துணை நூல்களையும் அவர்கள் பயன்படுத்தினார்களாம்! தேர்வில் வெற்றி பெற காப்பி அடிக்கும் முறையைக் கையாள் வது நேர்மையற்ற செயலாகும். சுயமாகச் சிந்தித்து விடையளிக் கும் மாணவர்களுக்கு இந்தக் காப்பி அடிப்பவர்கள் அநீதியையே இழைக்கிறார்கள்.

பிரபல விளையாட்டு வீரர்கள்கூட போதை மருந்துகளை உட் கொண்டு போட்டிகளில் வெற்றி பெற்றதாக நாம் செய்தித்தாள் களில் அடிக்கடி படிக்கிறோம். பந்தயக் குதிரைகளுக்குக்கூட ஓட்டத்திற்கு முன் போதை மருந்துகள் கொடுக்கப்படுகின்றன!

இப்படிக் குறுக்கு வழியை நாடுவது வாழ்க்கையிலேயே தோல் வியை அடையச் செய்யும் குறுக்கு வழிகள் என நினைக்க இவற்றை கையாள்பவர்களைப் பார்த்துப் பரிதாபம்தானேபட வேண்டும்!

மதிமுகம்: 88 ஜுலை 1991 புன்னகை: 7

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00








# பங்களாதேஷின் முதல் பெண் பிரதமர்

அண்மையில் பங்களாதேஷின் ஒரு பெண்மணி பிரதமர் பதவியை ஏற்ருர். இந்திய உபகண்டத்தில் இதற்கு முன் மூன்று நாடுகளில் மூன்று பெண் மணிகள் பிரதமர்களாக இருந்திருக் கிருர்கள்.

உலகிலேயே முதல் பெண் பிர தமர் ஸ்ரீலங்காவில் திருமதி சிரி மாவோ பண்டார நாயகே 1960ல் இவர் இப்பதவியை ஏற்ருர். அதற்கு ஒருவருடத்திற்கு முன் அந்நாட்டு பிர தமரும் திருமதி சிரிமாவோவின் கண வருமான எஸ். டபிள்யு. ஆர். டி. பண் டார நாயகே கொலே செய்யப்பட் டார். அவருக்குப் பின் பிரதமராக வந்த திருமதி பண்டார நாயகே தொடர்ந்து 17 ஆண்டுகள் பிரதமர் பதவியை வகித்தார்.

1966ல் இந்தியப் பிரதமர் லால் பகாதுர் சாஸ்திரி திடீரென இறந்து விடவே அவரது அமைச்சரவையில் அமைச்சராக இருந்த திருமதி இந் திரா காந்தியை நாடாளுமன்றக் காங் கிரஸ் கட்சி தம் தலைவியாகத் தேர்ந் தெடுத்தது. அதனுல் அவர் பிரதம ராஞர். அதன்பின் தொடர்ந்து இரு முறை பிரதமர் பதவியில் இருந்த திருமதி இந்திராகாந்தி 1977 பொதுத் தேர்தலில் தோற்ருர். ஆனுல் அதற்கு இரண்டு ஆண்டுகளுக்குப் பின் நடந்த தேர்தலில் வெற்றி பெற்று அவர் மீண்டும் பிரதமர் ஆனுர். 1984ல் அவர் ஒரு கொலேயாளியின் துப்பாக் கிக்குண்டிற்குப் பலியாஞர். அதுவரை அவர் பிரதமர் பதவியில் இருந்தார்.

திருமதி இந்திரா காந்தியின் ஆட்சி காலத்தில்தான் பங்களாதேஷ் உருவாகி யது அது உருவாக இந்தியா பெரிதும் உதவியது.

பாகிஸ்தானில் ஜுல்பிகர் அலி புட்டோ பிரதமராஞர். அச்சமயம் பாகிஸ்தான் அதிபராக இருந்த யாஹ்யா கான் பாகிஸ்தானே விட்டு ஓடிப் போய்விட்டதால் புட்டோ பாகிஸ் தானின் அதிபர் ஆனுர். அதற்கு ஐந்து ஆண்டுகளுக்குப் பின் பதவியிலிருந்து விலக்கப்பட்டு தூக்கில் இடப்பட்டார்.

அதற்குப்பின் அவரது மகள் பேநஜீர் புட்டோ அரசியலில் புகுந்து 1985ல் நடந்த தேர்தலில், அவர் அமைத்த பாகிஸ்தான் பீபில்ஸ் பார்ட்டி வெற்றி பெற்றது. அவர் பிரதமரும் ஆனுர். ஆனுல் 1990ல் நடந்த தேர்தலில் அவரது கட்சி தோற்றது.

பங்களாதேஷின் முதல் பிரதம ரான ஷேக் மஜ்பூர் ரஹமான் 1975ல் அந்நாட்டின் அதிபரானுர். ஆனுல் ஆருவது மாதத்தில் அவர் கொலே செய்யப்பட்டார். அதன்பின் அந்நாட் டில் பலபுரட்சிகள் ஏற்பட்டன. அப் படிப்பட்ட புரட்சியில் ஜெனரல் எர் ஷாட் பங்களாதேஷின் அதிபர் பதவி யைக் கைப்பற்றினுர். அவர் எட்டு ஆண்டுகள் தேர்தல்களே நடத்தாமல் தள்ளிப் போட்டுக் கொண்டே வந் தார். பலத்த கிளர்ச்சியால் முடிவில் அவர் தம் பதவியை ராஜினுமா செய்ய வேண்டியதாயிற்று.

அதன்பின் நடந்த தேர்தலில் பேகம் கலிதா ஜியாவின் தலேமையில் பங் களாதேஷ் நேஷனல் பார்ட்டி வெற்றி பெற்றது. 1991 ஏப்ரல் 5ந் தேதி பங் களாதேஷ் பார்லிமெண்ட் கூடியது. பேகம் கலிதா பிரதமராகத் தேர்ந் தெடுக்கப்பட்டார்.

அண்டை நாடான பர்மாவிலும் ஒரு பெண்மணி அந்நாட்டின் பிரதம ராவதற்கு வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. சென்ற ஆண்டுத் தேர்தலின் போது கொலே செய்யப்பட்ட பர்மியத் தலே வர் ஆங்சானின் புதல்வியின் கட்சி வெற்றி பெற்றது. ஆனுல் பர்மா அதி பர் ஜனநாயக முறை அரசாங்கம் அமைய இன்னமும் வாய்ப்பை அளிக்கவில்லே.







# நீதி காக்கும் விதம்

எருமையூரில் ஏகப்பன் என்ற வட்டிக் கடைக்காரன் இருந்தான். அவன் ஈவு இரக்கம் பாராமல் கொடுத்த கடனுக்கு வீட்டையோ வயலையோ தனதாக்கிக் கொண்டு விடுவான். அவனிடம் கந்தன் என்ற ஏழை ஆயிரம் வராகன் கடன் வாங்கிப் பத்திரத்தில் கையொப்பம் செய்து கொடுத்தான். அடுத்த வருஷமே அவன் வட்டியும் அசலும் எடுத்து வந்து அந்த வாங்கிக் கொண்டு தன் கடன் பத்திரத்தை ரத்து செய்யும்படி அவன் ஏகப்பனிடம் கேட்டான்.

ஏகப்பனோ வட்டியை மட்டும் கொடு எனக்கூறி "நீ எழுதிக் கொடுத்த பத்திரப்படி வருஷா வருஷம் ஐநூறு வராகன்கள் வட்டியாக ஒழுங்காகச் செலுத்துவாய் என்றுதான் உள்ளது. அசல் தொகையை திருப்பிக் கொடுப்பதாக எழுதப்படவில்லை. எனவே நீ உன் வாழ்நாள் முழுவதும் வருடா வருடம் எனக்கு ஐநூறு வராகன் வட்டியாகச் செலுத்தியே வர வேண்டும்" என்றான்.

கந்தன் அது அநியாயம் எனவே ஏகப்பன் "நீ பத்திரம் எழுதிக் கொடுத்தபடி நடக்கத்தான் வேண்டும். வா, நீதிபதியிடமே தீர்ப்புக் கேட்போம்" என்றான். இருவரும் நீதி மன்றத்திற்குச் சென்றனர். நீதிபதியும் கடன் பத்திரத்தை வாங்கிப் பார்த்துவிட்டு "இந்தப் பத்திரப்படி கந்தன் ஏகப்பனுக்கு வருடா வருடம் வட்டி கொடுத்தே வர வேண்டும். அசல் தொகை பற்றி எதுவும் குறிப்பிடப்படவில்லை" என்று தீர்ப்பளித்தார்.

அதைக்கேட்டு ஏகப்பன் மகிழ்ச்சியோடு தன் வீட்டிற்குச் சென்றான். கந்தனோ இடிந்து போய் நீதி

—சிவனார் செல்வன்—



மன்றத்திலேயே உட்கார்ந்து விட்டான். தனியாக இருந்த அவனை நீதிபதி கூப்பிட்டு "உன்னை ஏகப்பன் ஏமாற்றி விட்டான் என்பது நன்கு தெரிகிறது நீ அவனுக்குப் பணம் கொடுக்காமல் இருக்க ஒரு வழி உள்ளது. நீ உன் பெயரை விந்தன் என்று மாற்றிக் கொண்டு விடு. அதனால் கந்தனாக இருந்து எழுதிக் கொடுத்த கடன் பத்திரத்தைக் கொண்டு ஏகப்பன் உன் மீது நடவடிக்கை எடுக்க முடியாது" என்று யோசனைக் கூறினார்.

கந்தன் அவருக்கு நன்றி செலுத்தி விட்டு அப்போதே நீதிமன்ற முத்திரையுடன் தன் பெயரை விந்தன் என மாற்றிக் கொண்டு வீடு திரும்பினான். அன்று மாலை ஏகப்பன் தன் வட்டிப் பணத்தைக் கேட்ட போது கந்தன் "நான் கந்தன் இல்லை. விந்தன். இதோ பார் நீதி மன்றச் சான்றிதழ். எனவே இனி உன் பத்திரம் செல்லாது" எனக் கூறி அனுப்பி விட்டான்.

ஏகப்பனுக்கு விஷயம் புரிந்து விட்டது. கந்தனுக்கு நீதிபதிதான் இந்த யோசனை கூறி இருக்க வேண்டும் என ஊகித்து விட்டான். அதனால் கந்தனிடம் பணம் வசூல் செய்ய வேறொரு தந்திரம் செய்தான்.

ஒரு நாள் ஒரு பணக்காரன் கந்தனின் வீட்டிற்கு வந்தான். அவன் கந்தனிடம் "நான் இவ்வூரிலுள்ள கந்தனுக்கு என் தந்தையின் விருப்பப்படி லட்சம் வராகன்கள் கொடுக்க வேண்டும். ஏனென்றால் அவனது தந்தை என் தந்தையை ஆபத்து சமயத்தில் காப்பாற்றினாராம். நீதானே கந்தன்?" என்று கேட்டார். கந்தனும் ஆம் எனவே அப்பணக்காரன் "அதற்கு என்ன அத்தாட்சி? நீ தான் கந்தன் என்பதை இவ்வூரில் எனக்குத் தெரிந்த ஒருவர் உறுதி செய்ய வேண்டும். அப்படி அவர் கூறினால் உனக்கு இலட்சம் வராகன்கள் கொடுக்கிறேன் எனக்கு இந்த ஊரில் தெரிந்தவர் வட்டிக்கடை ஏகப்பன்தான்" என்றார்.

இலட்சம் வராகன்கள் கிடைக்கப் போகிறதே என்று ஆசைப்பட்டு அவன் அந்த பணக்காரரோடு

ஏகப்பனின் வீட்டிற்குச் சென்ருன். ஏகப்பனும் "இவன் கந்தன்தான் இப்போது பெயரை மாற்றிக் கொண்டிருக்கிருன். அப்படித்தான் மாற்றியது இனி செல்லாது என்றும் தன் பெயர் முன்பிருந்தது போல கந்தன் என்றும் ஒரு பத்திரம் எழுதி எனக்குக் கொடுத்தால் நீங்கள் இவனுக்கு இலட்சம் வராகன் கொடுக்கலாம்" என்ருன்.




இலட்சம் வரர்கன்கள் கிடைக்கப் போகிறதே என்ற ஆசையில் கந்தன் அது போன்ற பத்திரம் எழுதி ஏகப்பனிடம் கொடுத்தான். ஏகப்பனும் பத்திரத்தை வாங்கிக் கொண்டதும் "கந்தா! என்னையா ஏமாற்றப் பார்த்தாய்? இனி நீ எனக்கு வருடாவருடம் வட்டி செலுத்தியே ஆக வேண்டும். உனக்கு இலட்சம் வராகன்கள் கிடைக்காது இவர் பணக்காரரர் அல்ல. என் வேலைக்கார முனியன். உன்னை என் பிடியில் கொண்டு வர இப்படி வேஷம் போட்டு அனுப்பினேன்" என்ருன்.

அது கேட்டுக் கந்தன் திகைத்துப் போனுன். தான் ஏகப்பனிடம் மறுபடியும் ஏமாந்து போனதை உணர்ந்தான். தன்னைக் காப்பாற்றக் கூடியவர் நீதிபதியே என எண்ணி மறுபடியும் நீதிபதியிடம் போய் ஏகப்பன் மறுபடியும் தன்னை ஏமாற்றியதைக் கூறினுன். நீதிபதியும் "நீ எச்சரிக்கையுடன் இருக்க வேண்டாமா? ஏகப்பன்தான் ஏமாற்றுபவன் என்று நன்கு தெரியுமே. ஏன் பத்திரம் எழுதிக் கொடுத்தாய்? திடீரென ஒருவன் வந்து லட்சம் வராகன் கொடுப்பதாகச் சொல்லி உன்னை ஏகப்பனிடம் அழைத்துப் போகும் போதே நீ இதில் ஏதோ மோசம் உள்ளது என ஊகித்திருக்க வேண்டும். சரி. ஏகப்பனைக் கூப்பிட்டு விசாரிக்கிறேன்" என்று சொல்லி ஏகப்பனை அழைத்து வர ஆளை அனுப்பினுர்.

ஏகப்பன் வந்ததும் நீதிபதி "இந்தக் கந்தன் உனக்கு ஐநூறு வராகன்கள் வட்டி கொடுக்க வேண்டும் அல்லவா? அவன் அதை கொடுக்க முடியாது என்று கூறுகிருன். வாங்



எச்சரித்துவிட்டார். அதனால் கந்தனின் மனைவி "அவர் வெளியே வந்தால் கடனை வாங்கி வம்பில் மாட்டிக் கொள்வார். அவர் சிறையிலேயே இருந்து விட்டுப் போகட்டும்" என்று கூறவே ஏகப்பன் தொங்கிய முகத்துடன் திரும்பிச் சென்றான்.

கந்தன் சிறைக்குச் சென்ற ஐந்தாவது நாளிலேயே விடுதலையாகி வந்தான். ஏனெனில் அந்நாட்டு மன்னனுக்கு ஆண் குழந்தை பிறந்த காரணத்தால் அந்த மகிழ்ச்சியில் எல்லாக் கைதிகளும் விடுதலை செய்யப்பட்டார்கள். கந்தனைக் கண்டதும் ஏகப்பன் பணம் கேட்கவே அவனே "நான புரிந்த தவறுக்காக தண்டனை அனுபவித்தாயிற்று. அதனால் பணம் கொடுக்கத் தேவை இல்லை" என்று கூறி விட்டான்.

ஏகப்பன் நீதிபதியிடம் போய் முறையிடவே அவரும் "சட்டம் கந்தன் சொல்வதைத்தான் கூறுகிறது. ஒரு குற்றத்திற்காக ஒருவன் ஒருமுறை தண்டனை அனுபவித்து விட்டால் மறுபடியும் அதே குற்றத்தை விசாரித்து தண்டிக்க முடியாது" என்று சொல்லி அனுப்பி விட்டார்.

ஏகப்பன் எப்படியாவது கந்தனிடமிருந்து பணம் வசூலிக்க வேண்டும் எனத் தீர்மானித்து வேறொரு உபாயம் செய்தான். இருபத்தி நான்கு

கின கடனைத் திருப்பிக் கொடுக்காமல் இருப்பது பெரும் குற்றம் அதனால் இவனுக்குச் சிறைதண்டனை விதிக்கிறேன். இவன் உன் கடனைக் கொடுப்பதாக உத்திரவாதம் அளித்தாலே இவனைச் சிறையிலிருந்து விடுவிப்பார்கள்" என்றார். அதன்படி கந்தன் சிறைக்கு அனுப்பப்பட்டான்.

ஏகப்பன் கந்தனின் வீட்டிற்கு அன்று மாலையில் போய் சிறையிலிருந்து கந்தன் விடுதலையாக வேண்டும் என்றால் அவனது குடும்பத்தினர் அவன் கடனைக் கொடுக்க வேண்டும் என்றான். இந்தமாதிரி ஏகப்பன் வந்து பணம் கேட்பான், அதற்குத் தக்க பதில் சொல்லி அனுப்புங்கள் என்று நீதிபதி அக்குடும்பத்தினரை முன்னதாகவே

மணிநேரமானதும் மாயமாய் மறையக் கூடிய மையினுல் ஒரு சிபாரிசு கடிதம் எழுதி அதில் கையெழுத்திற்காக இடம்விட்டு அக்கடிதத்தை தனக்கு நம்பகமான ஒருவனிடம் கொடுத்து "இதை எடுத்துக் கொண்டு கந்தனிடம் போ. அவன் நம்பும்படி ஏதாவது சொல்லி இதில் நீ கந்தனே கையெழுத்துப் போடச் சொல்லி அவன் போட்டபின் கொண்டு வா" என்று கூறி அனுப்பினுன்.



அந்த மனிதனும் கந்தனேக் கண்டு "உனக்குத்தான் நீதிபதியைத் தெரியுமே. அவருக்கு நீ சிபாரிசு கடிதம் எழுதியது போல ஒரு கடிதம் எழுதிக் கொண்டு வந்திருக்கிறேன். நீ அதில் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தால் எனக்கு ஒரு நல்ல வேலே கிடைக்கும்" என்றுன். கந்தனும் "சிபாரிசு கடிதம் தானே. பரவாயில்லே. கையெழுத்துப் போடுகிறேன். இதனுல் உனக்கு வேலே கிடைக்குமானுல் எனக்கு சந்தோஷமே" எனக்கூறிக் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தான்.

மறுநாள் ஏகப்பன் அதில் ஒரு பொய் பத்திரம் தயாரித்து விட்டான். அதில் கந்தன் கையெழுத்தைத் தவிர மற்றவை புதிதாக எழுதப்பட்டவை. சிறையிலிருந்து வெளிப்பட்ட பணக்கஷ்டம் அதிகமானதால் தான் ஏகப்பனிடம் பத்தாயிரம் வராகன் கடன் வாங்கியுள்ளதாயும் அதற்கு வட்டியாக வருடத்திற்கு ஆயிரம் வராகன்கள் கொடுக்க சம்மதிப்பதாகவும் எழுதப்பட்டிருந்தது.

ஏகப்பன் அந்தப் பத்திரத்தை எடுத்துப் போய் நீதிபதியிடம் கொடுத்து தனக்குக் கந்தனிடமிருந்து பணம் கிடைக்கச் செய்யுமாறு வேண்டினுன். நீதிபதியும் அதனே வாங்கிக் கொண்டு விசாரணேக்கு மறுநாள் வரச்சொல்லி அவனே அனுப்பி விட்டார். அவர் கந்தனே அழைத்து "இது என்ன? மறுபடியும் ஏகப்பனிடம் ஏன் கடன் வாங்கினுய்?" என்று கேட்டார்.

கந்தனும் "நான் ஒன்றும் கடன் வாங்கவில்லேயே" எனவே நீதிபதி ஏகப்பன் கொடுத்து விட்டுப் போன

பத்திரத்தை எடுத்துக் காட்டினுர். கந்தனும் "இதில் தங்களுக்கு சிபாரிசு செய்தல்லவா எழுதப்பட்டிருந்தது. இப்போது அந்த வாசகமே மாறி இருக்கிறது. இது பொய்ப்பத்திரம். இதுவரை ஏகப்பன் என்னை இரண்டு தடவை ஏமாற்றியது தங்களுக்குத் தெரியும். இது மூன்ருவது முறை. இதற்கு நீங்கள்தாம் முடிவு கட்ட வேண்டும்" என்ருன்.

நீதிபதியும் "நீ சொல்வது சரியே வெறும் தீர்ப்புக் கூறுவதோடு நில்லாமல் அநியாயம் நடவாமலும் பார்த்துக் கொள்ள வேண்டும் அதை நாளை விசாரணையில் செய்கிறேன்" என்ருர்.

மறுநாள் ஏகப்பன் விசாரணைக்கு வந்தான். "நீ நேற்று கொடுத்த பத்திரம் பொய்யாகத் தயாரிக்கப் பட்டது என்பது தெரிந்து விட்டது. கந்தன் நீ அனுப்பிய ஆளைக் கூட்டி வரப் போயிருக்கிருன். நீ மாயமாய் மறையும் மையை உபயோகித்து கந்தனை ஏமாற்றினுய் என்று ஊகிக்க முடிகிறது. உன்னிடம் உள்ள பத்திரங்களை எல்லாம் பறிமுதல் செய்யப் போகிறேன். பிறரை ஏமாற்றிய குற்றத்திற்காக உனக்கு தண்டனை விதிக்கப் போகிறேன். நீ கந்தனுக்குப் பணம் கொடுத்ததற்கு சாட்சிகள் இல்லை. வீடோ வயலோ விலை மதிப்புள்ள பொருளோ எதுவும் இல்லாதபோது எதை நம்பி அவனுக்கு கடன் கொடுத்தாய்?" என்று கேட்டார்.

ஏகப்பன் திகைத்துப் போனுன். தன் எல்லாப் பத்திரங்களும் பறிமுதலாகி விடுமே என் பயந்து "இது பொய்ப் பத்திரமே. என்னை மன்னித்து விடுங்கள்" என்று கெஞ்சினுன். நீதிபதியும் "இனி நீ கடன் கொடுத்தால் சட்டத்திற்கு உட்பட்டு சாட்சிகள் முன் கடன் கொடுக்க வேண்டும். உன் இஷ்டப்படி கடன் பத்திரம் எழுதக்கூடாது" என எச்சரித்து அனுப்பினுர்.

ஏகப்பன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு சென்ருன்.






## 4

*[வினோதன் கொள்ளைக்காரர்களிடமிருந்து சுகுமாரன் என்ற சிறுவனைக் காப்பாற்றினான். வினோதன் கூறியபடி சுகுமாரன் கொள்ளைக்காரர்களை அரசாங்க வீரர்களிடம் பிடித்துக் கொடுத்தான். மன்னன் அவர்களுக்கு மரணதண்டனை விதித்தான். தம் பாவச் செயல்களுக்காக வருந்திய அக்கொள்ளைக்காரர்களை மன்னிக்குமாறு வினோதன் மன்னனிடம் கூற சுகுமாரனை அனுப்பினான். ஆனால் மன்னன் அதற்கு இணங்கவில்லை. பிறகு-]*

சிறைச்சாலையில் அடைபட்ட கொள்ளைக்காரர்கள் இருட்டில் எதுவும் பேசாமல் இருந்தார்கள். அப்போது ஒருவன் மெதுவாக "மன்னர் நம்மை உண்மையிலேயே மன்னித்து விடுவாரா?" என்று தன்னருகே இருந்த ஒருவனிடம் கேட்டான். அவனும் "கடவுள் கருணை காட்டினால் நாம் உயிர் தப்பலாம்" என்றான்.

"நீ என்னவோ கடவுள் கருணை என்கிறாய். ஆனால் எப்போதும் என்ன நடக்குமோ என்று பயந்து கொண்டிருந்தது உண்மைதானே. இப்போது அது நடந்து விட்டது. நாம் எல்லோரும் உயிரை இழக்கத்தான் போகிறோம்" என்றான் இன்னொருவன்.

அதற்கு வேறொருவன் "இவ்வளவு நாட்களாக இவனை நம்பிக்



கொண்டிருந்தோம். ஆனால் இவன் நம்மை எங்கே தப்புவிக்கப் போகிறான்? நாம் எல்லோரும் தூக்கில் தொங்க வேண்டியதுதான்'' என்றான்.

அவர்கள் பேசியதைக் கேட்ட ஜக்கு ''ஏண்டா இப்படி பயந்து சாகிறீர்கள்?'' என்று கேட்டான். அதற்கு அவன் ''பயந்து இப்போது தான் சாகிறோமா? இதுவரை நித்தம் நித்தம் பயந்து செத்துக் கொண்டு தானே இருந்தோம். நீ என்ன மகா வீரனா? அப்பாவிகளை, நிராயுத பாணிகளைத் தாக்கிக் கொல்ல வில்லையா? இதற்கு நாங்களும் துணை போனோம். எப்போது எந்த நிமிடம் பிடிபடுவோம் என்று நாம் எல்லோரும் பயந்து நடுங்கிக் கொண்டிருக்கவில்லையா? பிறர் கஷ்டப்பட்டு சம்பாதித்ததை நாம் கொள்ளையடித்து சந்தோஷமாக வாழ்ந்தது ஒரு பெரிய சாதனையா? இப்படி எல்லாம் செய்யச் சொல்லி எப்போதும் நாங்கள் பயந்து கொண்டே இருக்கும்படி செய்தது யார்? நீதானே. இப்போது ஏன் பயப்படுகிறீர்கள் என்று கேட்க உனக்கு வெட்கமாக இல்லை?'' என்று சீறினான்.

அந்த கேள்விக்கு ஜக்குவால் பதில் சொல்லமுடியவில்லை. தலை குனிந்து கொண்டு பேசாமல் இருந்தான். அப்போது அவர்களுக்கு விநோதனின் இனிய குரல் கேட்கலாயிற்று. ''நீங்கள் எல்லோரும் வாய்க்கு வந்தபடி ஏதேதோ சொல்கிறீர்களா? குற்றம் ஜக்கு ஒருவனுடையது மட்டும்தானா? மற்றவர்கள் ஒரு குற்றமும் செய்யவில்லையா? எனவே ஜக்குவுக்கு தண்டனை என்றால் உங்களுக்கும் தண்டனை கிடைக்கும்.''

அதுகேட்டு ஓரிரு நிமிடத்திற்கு யாரும் எதுவும் கூறவில்லை. அப்போது ஜக்கு குரல் ஒலித்த திக்கை நோக்கி ''தேவா! உண்மையிலேயே எங்களை உன்னால் காப்பாற்ற முடியுமா? எங்களைத் தூக்கிலிடும் நாள் கூடக் குறிப்பிட்டாகி விட்டது என்று காவல் வீரர்கள் கூறுகிறார்களே'' என ஈனக் குரலில் கேட்டான்.

''நீங்கள் யாவரும் தூய மனத்

துடன் அந்தரங்க சுத்தியாகக் கடவுளை வேண்டிக் கொள்ளுங்கள். நல்லவர்களுக்கு அவர் நன்மையே புரிவார்'' என்றான் விநோதன்.

அந்தக் குரல் கூறியது அவர்களுக்குச் சற்று ஆறுதலை அளித்தாலும் அவர்களுக்கு தாம் இறப்பது என்னவோ தீர்மானமாகி விட்ட விஷயம் என்றே நினைத்தார்கள். இதனால் அவர்களது பயம் அதிகரித்தது. உயிர் போகப் போகிறதே என்று அவர்கள் பயந்து கொண்டேதான் இருந்தார்கள்.

கொள்ளைக்காரர்களை தூக்கிலிட வேண்டிய நாள் வந்தது. இன்றோடு நம்மைப் பிடித்த சனியன் ஒழிந்தது என எண்ணி மக்கள் தூக்கு மேடையுள்ள மைதானத்தில் வந்து கூடினார்கள். அது காலை நேரம். சூரியனின் இளம் வெயில் பட்டுக் கொண்டிருந்தது.

நகரக் காவலதிகாரி குதிரை மீது அமர்ந்து முன்னதாக வர பின்னால் பலத்த காவலுடன் கொள்ளைக்காரர்கள் நடத்திச் செல்லப்பட்டார்கள். அப்போது ஒரு பெண் திடீரெனப் பாதை நடுவில் வந்து "பாவிகளா! என் கணவனைக் கொன்று அவனது பணத்தையும் அபகரித்தீர்களே. உங்களை தெய்வம் சரியானபடி தண்டித்து விட்டது. போங்கள். ஒழிந்து போங்கள்!!'' என்று உணர்ச்சி ததும்பக் கூறினாள்.

அதைக் கேட்டு கூட்டத்திலிருந்து



சிலர் ஓடி வந்து ஜக்குவையும் மற்ற கொள்ளைக்காரர்களையும் தாக்க முயன்றனர். அப்போது நகரக் காவலதிகாரி "நீங்கள் உணர்ச்சி வசப்பட்டு ஆத்திரம் அடைவது சரியே. ஆனால் இவர்கள் செய்த குற்றங்களுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டுள்ளது. எனவே நீங்கள் சட்டத்தை மேற்கொள்ள வேண்டாம். அதை நிலை நிறுத்தி நீதி வழங்க நாங்கள் இருக்கிறோம்'' என்றான்.

அப்போது ஜக்கு அந்தப் பெண்ணைப் பார்த்து இரு கைகளாலும் வணங்கி "தாயே! நாங்கள் பாவிகளே. உன் கணவனைப் போல மற்ற பெண்களின் கணவன்களையும் சகோதரர்களையும் சகோதரிகளையும், மக்களையும் கொன்ற



மாபெரும் பாவிகளே நாங்கள். ஒருவேளை நீங்கள் எங்களை மன்னித்தாலும் கடவுள் எங்களுக்குத் தண்டனை அளித்தே தீருவார். அதுதான் நடந்துள்ளது" என்றான் கண்ணீர் உகுத்தவாறே.

அதைக் கேட்டு அவனை அடிக்க வந்தவர்களின் ஆத்திரம் அடங்கியது. கொள்ளைக்காரர்களை முதலில் திட்டி நொறுக்கிய பெண்ணும் மௌனமானாள்.

நகரக் காவலதிகாரியும் "ஜக்கு! நீ செய்த கொடும் செயல்களுக்கு இப்போது வருந்தி என்ன பயன்? நீங்களெல்லாம் புரிந்த குற்றங்களுக்குச் சட்டப்படி விதிக்க வேண்டிய மரணதண்டனையே விதிக்கப்பட்டிருக்கிறது. உங்களுக்கு இரக்கம் காட்ட வேண்டும் என்று உங்களைப் பிடித்துக் கொடுத்த சுகுமாரனே மன்னனிடம் வேண்டினான். ஆனால் அவர் அதை ஏற்கவில்லை" என்றான்.

ஜக்குவும் "நாங்கள் உயிர் தப்ப முடியாது என்று எனக்குத் தெரியும். ஆனால் இவர்கள் இப்படிப் பட்ட கொடிய செயல்களைச் செய்யக் காரணமாக இருந்தவன் நான் தான். என்னை எப்படி வேண்டுமானாலும் கொல்லுங்கள். அணு அணுவாக வெட்டுங்கள். எல்லாவற்றையும் சகித்துக் கொள்ள நான் தயார். ஆனால் இவர்களை ஒன்றும் செய்யாமல் விட்டு விடுங்கள்" என்றான்.

அதைக்கேட்ட நகரக் காவலதிகாரி சிரித்து "மன்னர் தீர்ப்பு அளித்து விட்டார். அதை யாராலும் மாற்ற முடியாது. எனவே நீங்கள் எல்லோரும் தூக்கு தண்டனையை அனுபவித்தே தீரவேண்டும்" என்றான்.

எல்லோரும் தூக்குமேடை அமைக்கப்பட்ட பரந்தவெளியை அடைந்தார்கள். கொள்ளைக்காரர்கள் இருபதுபேர். அவர்களைக் காவல் வீரர்கள் தூக்கு மேடைக்குச் சற்று தூரத்தில் நிறுத்தினார்கள். தூக்கு மேடையில் கம்பங்கள் நாட்டப்பட்டு அவற்றின் நடுவே கயிறு தொங்கிக் கொண்டிருந்தது. காவலதிகாரி கொலையாளியைப்

பார்த்து "எல்லாம் தயாராகி விட்டதா?" என்று கேட்டான்.

அவனும் 'ஆம்' எனவே அந்த அதிகாரியும் "சரி. முதலில் இந்தக் கொள்ளேக்காரர்களின் தலேவனை ஜக்குவைத் தூக்கு மேடைக்குக் கொண்டு போய் நிறுத்து. அவனேத் தான் முதலில் தூக்கிலிட வேண்டும். பிறகுதான் மற்றவர்களே" என்முன். உடனே இரு காவல் வீரர்கள் ஜக்குவைக் கூட்டிக் கொண்டு தூக்கு மேடைமீது நிறுத்தினர்கள்.

அப்போது காவலதிகாரி "ஜக்கு! நீ கடைசியாக ஏதாவது வேண்டிக் கொள்ள விரும்புகிருயா?" என்று கேட்டான். ஜக்குவும் இருகைகளேயும் கூப்பி "நான் எவ்வளவோ பேர்களுக்கு எத்தனேயோ கஷ்டங்களேக் கொடுத்திருக்கிறேன். அவர்களிடம் என்னே மன்னிக்கும்படி வேண்டிக் கொள்கிறேன். என் பாவங்களே மன்னித்து எனக்கு நற்கதி அருளுமாறு கடவுளே பிரார்த்திக்கிறேன்" என்முன்.

கொலேயாளி ஜக்குவை மேடையில் சரியாக நிறுத்தி அவன் கழுத்தில் கயறைப் போட்டு சுருக்கு மாட்டினன். எல்லோரும் அவன் இறக்கப் போவதைக் காண சத்தம் செய்யாமல் இருந்தனர். அப்போது காவலதிகாரி "நான் ஒன்று இரண்டு என்று எண்ணிக்கொண்டு பத்து வரை போவேன். பத்து என நான் கூறும் போது நீ சுருக்குக் கயிறை



இழுத்து இறுக்க வேண்டும். சரியா?" என்முன்.

கொலேயாளியும் "அப்படியே செய்கிறேன்" என்முன். காவலதிகாரியும் ஒன்று இரண்டு மூன்று என்று எண்ணியவாறே பத்து என்முன். கொலேயாளியும் பலமாகக் கயிறை இழுத்தான் ஆனல் என்ன ஆச்சரியம்! ஜக்குவின் கழுத்தில் மாட்டப்பட்டிருந்த சுருக்குக் கயறு 'பட்'டென்று அறுந்து போயிற்று!

எல்லோரும் ஜக்கு தூக்கில் தொங்கப்போவதைக் காண ஆவலுடன் காத்திருந்தார்கள். ஆனல் தூக்குக்கயறு பட்டென அறுந்து போனது கண்டு ஆச்சரியப்பட்டார்கள். காவலதிகாரியோ கொலேயாளியைப் பார்த்து "என்னடா



இது?" என்று கேட்டான்.

கொலையாளியும் "அதுதான் எனக்கும் புரியவில்லை. இதுவரை நான் சுருக்குப் போட்டு இழுத்து எவ்வளவோ தண்டனைகளை நிறைவேற்றி இருக்கிறேன். ஒன்றுகூடத் தவறியதே இல்லை. இதென்னவோ அதிசயமாக இருக்கிறதே" என்றான்.

காவலதிகாரியும் "சரி! இன்னொரு கெட்டியான கயிறைக் கொண்டு வந்து சுருக்குப் போட்டு அவன் கழுத்தில் மாட்டு. முன்போல நான் பத்து வரை எண்ணிக் கொண்டே போகிறேன். பத்து என்றதும் பலமாக இழு. ஐக்கு தூக்கில் தொங்கட்டும்" என்றான்.

கொலையாளியும் வேறொரு கெட்டியான கயிறை எடுத்துத் தூக்கு மரத்தில் தொங்கவிட்டு சுருக்குப் போட்டு ஐக்குவின் கழுத்தில் மாட்டினான். காவலதிகாரியும் எண்ணிக்கொண்டே போய் பத்து என்றான். கொலையாளி கயிறைப் பிடித்து இழுத்தான். ஐக்குவின் கழுத்தில் சுருக்கு இறுகி அவனை மேலே தூக்குவதற்கு பதிலாக அவன் கழுத்தில் மாட்டப்பட்ட கயிறு பட்டென இம்முறையும் அறுந்தது.

அதைக் கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். காவலதிகாரியும் "இது ஏதோ நம் சக்திக்கு அப்பாற்பட்டது போலத் தெரிகிறது. இரண்டு தடவைகளிலும் சுருக்குக் கயறு அறுந்தது என்றால் அது ஏதோ ஒரு அதிசய சக்தியால்தான் நடந்திருக்க வேண்டும்" எனக் கூறிவிட்டு உடனே அதனை மன்னனிடம் கூற விரைந்துச் சென்றான்.

காவலதிகாரி கூறியதைக் கேட்ட மன்னன் மந்திரியையும் சேனாதிபதியையும் அழைத்துக்கொண்டு தூக்குமேடை மைதானத்திற்குச் சென்றான். கொலையாளியும் ஒரு கயறைக் கொண்டு வந்து கொடுக்கவே அவன் அதனை வாங்கிப் பார்த்துத் திருப்தி அடைந்தவனாய் "சரி, இப்போது இதை ஐக்குவின் கழுத்தில் சுருக்குப் போட்டு மாட்டி இழு" என்றான்.

கொலையாளியும் மன்னன் கூறிய

படி செய்து கயறை இழுத்தான். இம்முறையிலும் ஜக்குவின் கழுத்தில் மாட்டப்பட்ட கயறு பட்டென அறுந்தது. அதைக்கண்ட யாவரும் ஆவென ஆச்சரியத்தோடு கூவினுர்கள்.

அப்போது மன்னன் சற்று யோசித்தான். பிறகு அவன் "மூன்று முறைகளிலும் கயறு அறுந்தது என்ருல் அதற்குக்காரணம் இருக்கத்தானே வேண்டும். இந்தக் கொள்ளேக்காரர்கள் திருந்தி நல்ல விதமாக நடப்பதாக உறுதி கூறுவதாக அன்று சுகுமாரன் கூறினுன். நானே அவன் கூறும் தெய்வம் ஏதாவது அற்புதச் செயலேச் செய்து விடுவிக்க்ட்டும் என்றேன். சுகுமாரனின் தேவன் இப்போது அதனே என் கண்ணெதிரே செய்து காட்டி விட்டான். ஜக்குவையும் அவனது கூட்டாளிகளேயும் விட்டு விடுங்கள். அவர்கள் சுகுமாரனிடம் சொல்லி அனுப்பியபடி மனம் திருந்தி இனிமேல் நல்லவர்களாக வாழ்க்கை நடத்த வேண்டும்" என்ருன்.

மன்னன் இவ்வாறு அறிவித்ததை கேட்டுக் கூடி இருந்த மக்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். காவல் வீரர்கள் கொள்ளேக்காரர்களுக்குப் பூட்டிய விலங்குகளேக் கழற்றி விட்டார்கள். அவர்கள் யாவரும் மன்னனின் காலில் விழுந்து வணங்கினுர்கள். இனித் தாங்கள் புது வாழ்வை மேற்கொள்வதாகக் கூறி "மன்னர் வாழ்க" என்று கோஷம் எழுப்பினுர்கள்.

சுகுமாரன் காட்டில் போய் விஞேதனேச் சந்தித்தான். விஞேதனும் "நான் ஒரு அற்புதத்தை என் சக்தியால் அம்மன்னனுக்கு செய்து காட்டினேன். அவன் உனக்கு வாக்களித்தபடி கொள்ளேக்காரர்களே விடுதலே செய்துவிட்டான். அவர்கள் திருந்தி நல்வாழ்வு மேற்கொண்டது பற்றி மகிழ்ச்சி அடைவோம்" என்ருன் சிரித்தவாறே.

(தொடரும்)





# சீரிய குரு

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! நீ ஏதோ ஒரு கொள்கையை உறுதியாகப் பற்றிக் கொண்டு இந்த விடா முயற்சியில் இறங்கி இருப்பதாகத் தெரிகிறது. இதனால் பல கஷ்டங்களை நீ அனுபவிக்க வேண்டியும் வரலாம். இதனை விளக்க ஆத்மானந்தர் என்ற முனிவரின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறி கதையை ஆரம்பித்தது.

சிம்மபுரி என்ற நாட்டை சிம்மசேனன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது ஒரே மகன் ஜெயசேனன். தன் மகனை நல்ல குருவிடம் கல்வி பயில அனுப்பத் தீர்மானித்து அவன் தன் நாட்டி

## வேதாளம் சொல்லும் கதை



லேயே சிறந்த முறையில் ஆசிரமம் அமைத்து குருகுலம் நடத்தி வரும் ஆத்மானந்தரைக் கண்டான். அவன் அவரிடம் ''நான் இந்நாட்டு மன்னன். இவன் என் மகன் ஜெயசேனன். இவன் தங்களுக்கு மாணவனுகும் பாக்கியத்தை அளிக்க வந்திருக்கிறேன்'' என்று கர்வத்தோடு கூறினுன்.

ஆத்மானந்தரோ ''இந்த குருகுலத்தில் அரசன் மகன் ஆண்டி மகன் என்றெல்லாம் வித்தியாசம் பார்ப்பது இல்லே. எல்லோரும் சமமே. நீ என்னவோ இவன் மாணவனுவது நான் செய்த பாக்கியம் எனக் கூறினுய். இவனே என் மாணவனுக ஏற்பதா வேண்டாமா என்பது பற்றி நான் முடிவு செய்யாத போது என் பாக்கியத்தைப் பற்றிச் சொல்ல முடியாது'' என்ருர்.

முனிவர் கூறியதைக் கேட்டு சிம்மசேனனின் முகம் கோபத்தால் சிவந்தது. கண்கள் கோவைப் பழம் போலாகின. அவனுக்குத் தான் என்ற அகம்பாவம் அதிகமாக இருந்ததால் முனிவர் கூறியதைக் கேட்டு ஆத்திரம் கொண்டான். காட்டில் வாழும் ஒரு சாதாரணச் சன்னியாசி நாட்டையே ஆளும் மன்னனேச் சற்றும் மதியாமல் பேசுவதா என்றுக் கொந்தளித்தான்.

முனிவரும் அவன் முகம் போன போக்கைக் கண்டார். ஆனுல் எதுவும் சொல்லாமல் எப்போதும் போல அமைதியாகப் புன்னகை புரிந்தாவறே இருந்தார். இது மேலும் அரசனின் ஆத்திரத்தைக் கிளறி விட்டது.

அதனுல் சிம்மசேனன் ''நான் இந்நாட்டு மன்னன் சொல்கிறேன் என்ருல் நீங்கள் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். என் சக்தி எவ்வளவு தெரியுமா?'' என்று கோபத்தோடு கூறினுன். ஆத்மானந்தரும் ''உன் சக்தி தெரிந்ததுதானே. நீயோ உன் மகனுக்குக் கல்வி நான் புகட்ட வேண்டும் என்று கேட்கிருய். சற்று அடக்கத்துடன் இதைத் தெரிவித்திருக்க வேண்டும். சரி, உனக்காக இல்லாவிட்டாலும் இந்தச் சிறுவனின் எதிர்காலம் பாழாகி

விடக் கூடாதே என்பதற்காக இவனை என் மாணவனாக ஏற்கிறேன். அரசகுமாரன் என்பதற்காக இவனுக்கு இங்கு எவ்விதத் தனிச் சலுகையும் கிடையாது. மற்ற எல்லா மாணவர்களைப் போலத் தான் வாழ வேண்டும். தெரிந்ததா?'' என்றார் அமைதியுடன்.

அரசகுமாரன் ஏழை எளியவன் போல வாழ்வதா? அதுவும் எல்லோருடனும் சமநிலையில் இருந்து பழகிக் கல்வி கற்பதா? இது அரச வம்சத்திற்கே இழிவல்லவா? ஆனால் வேறு வழி இல்லை. நல்ல குருவிடம் கல்வி பயில அனுப்ப வேண்டும் என்றால் அவர் விதிக்கும் நிபந்தனைகளை ஏற்றுத்தானே ஆக வேண்டும். மேலும் இப்போது தன் கோபத்தைக் காட்டினால் வந்த வேலை நடக்காது எனக் கண்டு பிறகு முனிவரை கவனிக்க வேண்டிய விதத்தில் கவனித்துக் கொள்ளலாம் என அவன் தன் மனதில் நினைத்துக் கொண்டான்.

சிம்மசேனனும் கோபத்தை அடக்கிக் கொண்டு ''இது பற்றி வாக்கு வாதம் ஏன்? என் மகனுக்குக் கல்வி புகட்டுவதாகக் கூறி விட்டீர்கள். அதைச் செய்யுங்கள்'' என்று கூறி ஜெயசேனனை அக்குருகுலத்தில் விட்டு விட்டுப் போனான்.

ஜெயசேனனும் அங்கு தன் பதினைந்தாவது வயது வரை மற்ற மாணவர்களைப் போல வாழ்ந்தும்,



தன் குரு சொன்ன வேலைகளை எல்லாம் பணிவுடன் செய்தும் எல்லா சாஸ்திரங்களையும், போர் கலைகளையும் கற்றுக் கொண்டான். ஒரு நாள் ஆத்மானந்தர் அவனை அழைத்து ''உன் படிப்பு முடிந்து விட்டது இனி நீ தலைநகருக்குப் போகலாம்'' என்றார்.

அப்போது ஜெயசேனன் ''குருவே! தங்களுக்கு குருதட்சணை செலுத்த விரும்புகிறேன் என்ன வேண்டுமோ சொல்லுங்கள்'' என்றான். அவரோ எதுவும் வேண்டாம் என்று கூறவே ஜெயசேனனும் ''நான் அவசியம் குருதட்சணை செலுத்தியே ஆக வேண்டும். அது என்ன என்பதைத் தாங்கள்தான் கூறவேண்டும்'' என மறுபடியும் வேண்டினான்.

ஆத்மானந்தரும் "சரி, ஆனால் அதைத் தக்க சமயத்தில் உன்னிடம் கேட்டு வாங்கிக் கொள்கிறேன்" என்று கூறி அவனை அனுப்பி விட்டார். ஜெயசேனனும் அரண் மனையை அடைந்தான். தன் மகன் எல்லா சாஸ்திரங்களைக் கற்றுப் போர்க்கலைகளிலும் நல்ல தேர்ச்சி அடைந்துள்ளது கண்டு சிம்மசேனன் மகிழ்ந்தான். ஆனால் ஆத்மானந்தர் முன்பு தன்னைச் சற்றும் மதியாமல் பேசியதை எண்ணி அவன் ஆத் திரமும் கோபமும் கொண்டான்.

அவன் ஒரு படைத்தலைவனைத் தனியாக அழைத்து "நீ சில வீரர் களுடன் ஆத்மானந்தரின் குருகுலத் திற்குப் போ. நீ அவரிடம் அவர் இங்கு வந்து என் கால்களில் விழுந்து வணங்க வேண்டும் என்று கூறு. அவர் மறுத்தால் அந்த குரு குலத்தையே எரித்துச் சாம்ப லாக்கிவிட்டு வா" என்று கட்டளை இட்டான்.

அப்படைத்தலைவனும் சில வீரர் களை அழைத்துக் கொண்டு ஆத்மா னந்தரின் குருகுலத்தை அடைந்தான். முனிவரிடம் அவன் மன்னனின் கட்டளையைத் தெரிவித்தான். அவரோ "நான் போய் அந்தக் கர் வம் பிடித்த துஷ்டனின் காலில் விழுந்து வணங்க முடியாது" என்று கூறினார். படைத்தலைவன் உடனே வீரர்களுக்குக் கட்டளை இட அவர்கள் அந்த குருகுலத்திற் குத் தீமூட்டினார்கள். அது எரிந்து சாம்பலாகி விட்டது.

ஒருவாரம் கழிந்தது. ஆதமானந் தரை எப்படியாவது பணிய வைக்க



வேண்டும் என நினைத்து சிம்மசேனன் அவரது குருகுலம் இருந்த இடத்திற்குச் சென்றான். அந்த குருகுலம் எரிந்து சாம்பலாகியது கண்டு மகிழ்ந்தான். ஆத்மானந்தர் ஒரு மரத்தடியே உட்கார்ந்திருப்பது கண்டு ஆனந்தப்பட்டான்.

அவன் முனிவரிடம் போய் "அன்று என்ன சொன்னாய்? ஆண்டியும் அரசனும் இங்கு சமம் என்றுதானே? இப்போது பார்த்தாயா என் சக்தியை? உன்னை என்னால் ஒழித்துக் கட்ட முடியும்" என்றான் அட்டகாசமாகச் சிரித்துக் கொண்டே.

ஆத்மானந்தரோ "அடமுட்டாளே! நான் அன்று உன் அகம்பாவத்தைத்தான் சுட்டிக் காட்டினேன். அதை நீ தவறாகப் புரிந்து கொண்டு இப்படி நாச வேலையில் இறங்கி விட்டாய். உன்னால் என்னை ஒன்றும் செய்ய முடியாது" என்றார் நிதானமாக.

சிம்மசேனனோ "முடியாதா? இப்போதே உன்னைக் கொல்கிறேன் பார்" என்று வில்லை எடுத்து அதில் அம்பை வைத்து எய்தான். ஆனால் ஆத்மானந்தர் பார்த்த பார்வையில் மன்னன் எய்த அம்பு எரிந்து சாம்பலாகியது. அவ்வளவுதான். சிம்மசேனன் சட்டெனக் குதிரை மீது ஏறித் திரும்பிப் பாராமல் ஓடி விட்டான். அதற்குப்பின் அவன் ஆத்மானந்தரைப் பற்றி நினைக்கக் கூடவில்லை.

சில மாதங்களுக்குப் பின் சிம்மசேனன் தன் மகன் ஜெயசேனனுக்கு இளவரசுப் பட்டாபிஷேகம் செய்வித்தான். அது முடிந்ததும் ஜெய





சேனன் முதல் வேலையாகத் தன் குருவைக் காண அவரது குருகுலம் இருந்த இடத்திற்குச் சென்றான் ஆனால் அது எரிந்து சாம்பலாகிக் கிடப்பதைக் கண்டு அவன் திடுக்கிட்டான். ஆத்மானந்தர் ஒரு மரத்தின் கீழ் தியானத்தில் அமர்ந்திருப்பது கண்டு அவன் அவரது கால்களில் விழுந்து வணங்கினான்.

அவன் அவரிடம் "குருவே! என் பட்டாபிஷேகம் நடந்தது என்ற மகிழ்ச்சியில் தங்களிடம் ஆசிகள் பெற வந்தேன். ஆனால் இங்கே குருகுலமே எரிந்து கிடக்கிறதே. இந்தக் கொடிய செயலைச் செய்தவன் யாராக இருந்தாலும் நான் அவனைக் கொன்றே தீர்வேன். இது நான் செய்யும் சபதம்" என்றான் ஆவேசத்தோடு.

ஆத்மானந்தரோ அமைதியாக "ஜெயசேனா! இதைச் செய்தது யார் என்பதைக்கூடத் தெரிந்து கொள்ளாமல் கண்மூடித்தனமாக சபதம் செய்து விட்டாயே. யாரோ ஒருவன்தான் என்ற அகந்தையில் இப்படிச் செய்து விட்டான். அவன் யாரென்று நான் கூறினால் நீ உன் சபதத்தைக் கைவிட்டு விடுவாய்" என்றார்.

ஜெயசேனனும் "செய்த சபதத்தை விட்டு விடுவேனா? அவன் யாரென்று கூறுங்கள். சற்றும் ஈவிரக்கம் காட்டமாட்டேன்" என்றான். அதைக்கேட்ட முனிவர் சிரித்தவாறே "அவன் வேறுயாருமில்லை. உன் தந்தைதான்" என்றார். ஜெயசேனனும் "ஆ! என் தந்தையா இக்கொடிய செயலைச் செய்தார்? எனக்கு எல்லாம் கலைகளையும் கற்றுக் கொடுத்த தங்களுக்கா இந்தக் கொடுமை இழைத்தார்? அவரை என் தந்தை என்றும் பாராமல் கொன்று என் சபதத்தை நிறை வேற்றுகிறேன்" என்றான்.

ஆத்மானந்தர் அப்போது முன் பின் யோசியாமல் அரசகுமாரன் செய்துவிட்ட சபதத்தைப் பற்றி யோசித்தார். மகனே தந்தையைக் கொல்வதா? இது மாபெரும் பாவமாயிற்றே. அந்த மாபெரும் பாதகச் செயலை ஜெயசேனனைச் செய்யும்படி விட்டுவிடக் கூடாது. அவனை அவ்வாறு செய்வதிலிருந்து தடுத்தே ஆக வேண்டும். ஒரு நிமிடம் யோசித்துவிட்டு அதற்கான

வழியை அவர் கண்டுபிடித்தார்.

அப்போது ஆத்மானந்தர் "ஒரு விஷயம். நீ எனக்கு குருதட்சணை கொடுப்பதாகக் கூறினாய். நான் தக்க சமயத்தில் அதனைக்கேட்டு வாங்கிக் கொள்வதாகக் கூறினேன். இப்போது அந்தவேளை வந்து விட்டது" என்றார்.

ஜெயசேனனும் "கேளுங்கள் குருவே! எது கேட்டாலும் கொடுக்கிறேன்" எனவே ஆத்மானந்தரும் "உன் தகப்பனுருக்கு உயிர்ப் பிச்சை நீ கொடுப்பதே நான் கோரும் குரு தட்சணை" என்றார். ஜெயசேனனும் அவர் கேட்டபடியே தன் தந்தையைக் கொல்வதில்லை என்று கூறி அவரது கால்களில் விழுந்து வணங்கிவிட்டுத் திரும்பிச் சென்றான்.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னனே! ஆத்மானந்தர் தனக்குக் கேடு விளைவித்த சிம்மசேனனை தவசக்தியால் எரித்திருக்கலாமே. அப்படிச் செய்யாமலும் ஜெயசேனன் சபதம் செய்த போது அதனை முறிக்க சிம்மசேனனுக்கு உயிர்பிச்சை அளிக்க வேண்டும் என்று குருதட்சணையாகக் கேட்டாரே, இது சரியா? இதற்குச் சரியான பதிலைத் தெரிந்திருந்தும் நீ கூறுவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகி விடும்" என்றது.

விக்கிரமனும் "ஆத்மானந்தர் முற்றும் துறந்த முனிவர். விருப்பு வெறுப்பு இல்லாதவர். பகைமை உணர்ச்சியைப் போக்கடித்தவர். தனக்குக் கெடுதல் செய்பவனுக்கும் நன்மையே செய்ய வேண்டும் என நினைப்பவர். அதனால்தான் சிம்ம சேனன் அவரை அம்பு எய்து கொல்ல முயன்றபோது அவனை எரிக்காமல் அவன் எய்த அம்பை எரித்தார். ஜெயசேனனின் சபதத்தால் அவனது தந்தையின் உயிர் போகும் என்று கண்டு அவனுக்கு உயிர்பிச்சை அளிப்பதைத் தன் குருதட்சணையாகக் கேட்டார். இது முனிவர்களின் இயல்பு" என்றான்.

விக்கிரமனின் இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# தந்தை சொல் மீறாத தனயன்

சித்திரபுரி மன்னன் சித்திரசேனன் தன் வம்ச பரம்பரை ஆட்சியைப் பற்றிப் பெருமைப்பட்டுக் கொண்டிருந்தான். ஒரு நாள் தர்பார் முடிந்ததும் ஆஸ்தான விதூஷகனுடன் பொழுதைப் போக்க ஏதேதோ பேசிக் கொண்டிருந்தான். அப்போது அவனது இரண்டு வயது மகன் சந்திரசேனன் மெதுவாக அடிமேல் அடிவைத்து அங்கே வந்தான்.

சித்திரசேனன் தன் மகனை இருகைகளிலும் தூக்கிச் சிம்மாசனத்தில் உட்கார வைத்து "சந்திரசேனா! நம்பரம்பரையார் உட்கார்வது போல உட்கார்" என்றான். சந்திரசேனனும் தன் தந்தை கூறியதைப் புரிந்து கொண்டவன் போலக் கால்மேல்கால் போட்டு கம்பீரமாகச் சுற்றிலும் பார்த்தான். சித்திரசேனன் அதைப் பார்த்து ஒரேயடியாக மகிழ்ந்து விதூஷகனிடம் "பார்த்தாயா என் மகன் எப்படி கம்பீரமாக இருக்கிறான்?" என்றான்.

விதூஷகனும் "ஆமாம் அரசே! இவனுடைய வயதுதான் என்ன! அமர்ந்திருக்கும் தோரணை தான் என்ன! அற்புதம்! வெகு அற்புதம்" என்றான். இதைக்கேட்டு சித்திர சேனன் உச்சிகுளிர்ந்து ஒரு வைரமாலையை விதூஷகனுக்குப் பரிசாக அளித்தான்.

இதற்குப் பின் சந்திரசேனன் சிம்மாசனத்திலிருந்து இறங்கிப் போய் விளையாட லானான். அப்போது விதூஷகன் அவனிடம் "இளவரசே! எங்கே இன்னொரு முறை சிம்மாசனத்தில் அமர்ந்து என்னைக்களிப்பியுங்கள் பார்க்கலாம்" என்றான். ஆனால் சந்திரசேனன் அப்படிச் செய்யாமல் விளையாட்டிலேயே ஈடுபட்டிருந்தான். இதைக் கண்டு சித்திரசேனனின் முகம் கருத்தது.

அப்போது விதூஷகன் சிரித்தவாறே "அரசே! இளவரசர் உங்கள் மகனாயிற்றே! தன் தந்தையின் பேச்சைத்தான் கேட்பாரே ஒழிய மற்றவர்கள் கூறியதை அவர் செய்ய மாட்டார். இது தங்களதும் தங்களது வம்சத்தவரின் இயல்புமாகுமே!" என்றான்.

சித்திரசேனனும் "சபாஷ் விதூஷகா! நன்கு கூறினாய்" என்று கூறி இன்னொரு வைரமாலையைப் பரிசாக அளித்தான்.



# மகான்கள் கனவு கண்ட பாரத நாடு

## பிரிவினை தீர்வு அல்ல

பாரத நாட்டின் வரலாற்றில் மிக முக்கிய காலம் 1940-45 ஆகும். இக்காலத்தில் இந்திய தேசிய காங்கிரஸின் தலைவராக சுதந்திரப் போராட்ட மாபெரும் வீரர் மௌலானா அபுல் கலாம் ஆஜாத் பொறுப்பேற்றிருந்தார். எல்லோர் அன்பிற்கும் பாத்திரரான ஆஜாத் 1888-ல் பிறந்தார். நம்நாடு சுதந்திரம் அடைந்ததிலிருந்து 1958ல் அவர் இறக்கும் வரை இந்நாட்டு மத்திய அரசின் கல்வி அமைச்சராக இருந்து திறம்படப் பணிபுரிந்தார்.

ஆஜாத் பாரததேசம் இரண்டாகப் பிரிக்கப்படுவதைப் பலமாக எதிர்த்தார். இவ்விதம் பிரிவினையால் ஏற்படப் போகும் பயங்கர விளைவுகளைப் பற்றி 1946ல் அவர் இவ்வாறு கூறினார்:

"நம் பிரச்னைகளுக்குப் பிரிவினை ஒரு தீர்வு அல்ல. பிரிந்து போவதால் மனக்கசப்பு அதிகரித்து மோதல்கள் ஏற்பட்டு வெறுப்பின் காரணமாக இரு நாடுகளிலும் உள்ள சிறுபான்மையோரின் நிலை மிகவும் மோசமாகி விடும். தற்போது நம் நாட்டில் நிலவும் போட்டி, பொறுமை, வெறுப்பு மனப்பான்மை நிரந்திரமாக இராமல் சிறிது காலத்திற்கே இருக்கும் என நான் நம்புகிறேன். கிளாட்ஸ்டன் கூறியபடி நீர்பயம் தெளிய நீரில் குதித்தாலே சரியாகும் என்பதற்கு இணங்க நம் பிரச்னைகளை நாமே ஆராய்ந்து தீர்த்துக் கொள்ள வேண்டும். இதுதான் சரியான வழி"

அன்று ஆஜாத் கூறிய அறிவுரையை ஏற்று நடந்திருந்தால் இன்று நம் துணைக் கண்டத்தில் அமைதி நிலவி இருக்குமே!

## உங்களுக்குத் தெரியுமா?

1. பிரபல வரலாற்று ஆசிரியர் லேன்பூல் "வாழ்க்கையில் உருண்டு கொண்டே போய் இறக்கவும் உருண்டே அவர் சென்றூர் என்று ஒருவரைப் பற்றிக் கூறிப்பிட்டார். அவர்யார்"?
2. உலகின் மிக ஆழமான சுரங்கங்கள் எங்கே உள்ளன?
3. பார்சீகள் முதல் முதலில் இந்தியாவிற்கு எப்போது எங்கு வந்தார்கள்?
4. பாரத நாட்டில் மிகப்பெரிய தூயநீர் ஏரி எங்கு உள்ளது?

(விடைகள் 36ம் பக்கத்தில்)



# கலைமகள்

ஆயகலைகள் அறுபத்து நான்கினை யும் ஏய உணர்விக்கும் என் அம்மை என்று கலைமகளை நாம் படிக்க ஆரம் பிக்கும் போது துதிக்கிறோம். வெள்ளைக் கலை உடுத்து வெள்ளைப்பணி பூண்டு வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாள் எனக் கலைமகளான சரஸ்வதி தேவியை வணங்குகிறோம். கலைமகள் அலை மகள், மலைமகள் என சரஸ்வதி, இலட்சுமி, பார்வதி மூவரையும் படிப்பு, பணம், சக்தி ஆகியவற்றின் தெய்வங்களாக வணங்குகிறோம் சரஸ்வதி தேவி பிரம்மதேவனின் நாவில் உறைவதாகவும் கூறுகிறார் கள்.

பழங்காலத்தில் ரிஷி முனிவர்கள் சரஸ்வதி நதிக்கரையில் அமர்ந்து தவம் செய்து அரிய ஞானத்தைப் பெற்றார்களாம். மனதிற்கு இதம்

அளித்து அறிவைப் பெருக்கும் கலைமகளின் கைகளில் வீணையும் புத்தகமும் இருப்பதை அத்தேவியின் படங்களிலும் சிலைகளிலும் காண லாம். சரஸ்வதியின் வாகனம் அன்னப்பறவை

## இவ்வளவு போர்களா!

அண்மையில் வளைகுடாப் போர் முடிந்ததால் மக்கள் நிம்மதியுடன் மூச்சுவிட்டனர். இச்சமயம் நார்வேயைச் சேர்ந்த ஒரு கணித ஆராய்ச்சியாளர் போர்களைப் பற்றிய ஆய்வு நடத்தியுள்ளார். கடந்த 5560 ஆண்டுகளில் 14531 போர்கள் நடந்துள்ளன என்றும் இது ஆண்டிற்கு சராசரியாக 2.5 போர் ஆகிறது என்றும் அவர் புள்ளி விவரங்களை அளித்துள்ளார்.



# அம்புலிமாமா செய்திகள்




## அமெரிக்காவில் இராமாயண முதல் மொழியாக்கம்

அமெரிக்காவில் முதல்முறையாக வால்மீகி இராமயணத்தை ஆங்கில மொழியில் மொழி பெயர்த்திருக்கிறார்கள். மூன்று பல்கலைக் கழகங்களைச் சேர்ந்த ஐந்து சம்ஸ்கிருதப் பண்டிதர்கள். இந்தத் திட்டத்தை பனிரெண்டு ஆண்டுகளுக்கு முன் வகுத்து செயல்படுத்தலானார்கள். பிரின்ஸ்டன் பல்கலைக் கழகம் அண்மையில் இதன் மூன்றுவது தொகுப்பை வெளியிட்டது. இன்னும் நான்கு தொகுப்புகள் வெளிவந்ததும் இராமாயண மொழியாக்கம் முழுமை பெற்றுவிடும். 25 ஆண்டுகளுக்கு முன் பரோடாவில் வெளியிடப்பட்ட பரிஷ்கிருத இராமாயணம் இதற்கு ஆதாரம்.

# இலக்கிய உலகம்

1. ராபின்சன் க்ருஸோ தீவில் எத்தனை நாட்கள் இருந்தான்?
2. 'புல் சர்க்கஸ்' என்ற பெயரில் சுயசரிதம் எழுதியவர் யார்?
3. 'தி பாஸ்ட் மாஸ்டர்ஸ்', 'எ பிளம் ஆன் பிளம்' என்ற இரண்டு நூல்களை இரு பிரிட்டிஷ் பிரதமர்கள் எழுதினர்கள் அவர்கள் யார்?
4. 'ஆல் இஸ் வெல் தட் எண்ட்ஸ் வெல்' என்பது ஷேக்ஸ்பியர் ஆங்கிலத்தில் எழுதிய ஒரு நாடகம். புகழ்பெற்ற ரஷ்ய எழுத்தாளர் ஒருவர் தம் புதினத்திற்கு முதலில் இப்பெயரை வைத்துவிட்டுப் பிறகு அதை மாற்றினர் அந்த புதினத்தின் பெயர் என்ன? அந்த ஆசிரியர் யார்?

## விடைகள்

### உங்களுக்குத் தெரியுமா?

1. ஹுமாயூன் குழந்தையாக இருக்கையில் காய்ச்சலில் உருண்டார். பெரியவராகி மாடிப்படிகளில் உருண்டு விழுந்து இறந்தார்.
2. பெங்களுருக்கு அருகே உள்ள கோலார் தங்கச் சுரங்கம்
3. கி.பி 760, குஜராத்தில்.
4. காஷ்மீர் பள்ளத்தாக்கிலுள்ள புலால் ஏரி.

### இலக்கியம்

1. 23 வருடம், 2 மாதம், 19 நாட்கள்.
2. சர். ஆண்டனி ஈடன்
3. ஹெரால்ட் மாக்மில்லன், ஹெரால்ட் வில்சன்.
4. 'வார் அண்ட் பீஸ்' லியோ டால்ஸ்டாய்



## மணக்காதே!

அட்லாண்டா ஒரு அழகிய இளவரசி. ஒருநாள் அவள் தனியாக ஒரு பாறையருகே சென்றபோது ஒரு குரல் ஒலிப்பதைக் கேட்டாள். அது அவளைத் திருமணம் செய்து கொள்ளாதே என்றும் மீறிச் செய்து கொண்டால் விபரீத விளைவுகள் ஏற்படும் என்றும் எச்சரித்தது.

இதே சமயம் பல அரசகுமாரர்களும் பிரபுக்களும் அட்லாண்டாவைத் தாம் மணக்க விரும்புவதாக அவளது தந்தைக்குச் செய்தி அனுப்பினர்கள். அவர்களில் யாரைத் தேர்ந்தெடுப்பது என்பது பிரச்னையாயிற்று.





தான் விவாகம் செய்து கொள்ள முடியாது என்று தன் தந்தையிடம் கூறினல் அவர் கட்டாயப்படுத்தித் தனக்கு விவாகம் செய்து வைத்து விடுவார் என்பது அட்லாண்டாவுக்குத் தெரியும். ஆனல் ஒரு அரசகுமாரிக்குத் தன் விவாகம் நடக்க எந்தவித நிபந்தனையையும் விதிக்க உரிமை உண்டு. அதனல் அவள் தன்னை ஓட்டப் பந்தயத்தில் வெல்பவனையே தன் கணவனுகத் தேர்ந்தெடுக்கப் போவதாகக் கூறினுள்.



ஓட்டப் பந்தயத்தில் அவர்கள் தோற்ருல் மரண தண்டனே ஏற்க வேண்டும். இந்தப் பந்தயத்திற்கு நடுவராக ஹிப்போமெனுஸ் என்ற இளைஞன் பணியாற்றினன். ஓட்டப் பந்தயத்தில் அட்லாண்டாவே மற்ற வர்களைத் தோற்கடித்து வந்தாள்.

பந்தயத்தில் கலந்து கொண்ட அரசகுமாரர்கள் தம் தோல்வியை ஒப்புக் கொண்டு மரண தண்டனையை ஏற்றனர். இப்படியே போட்டிக்கு வந்த அரசகுமாரர்கள் யாவரும் தோற்றுப் போய்த் தம் உயிரை நீத்தனர். அப்போது திடீரென நடுவராக இருந்த ஹிப்போமெனஸ் தான் பந்தயத்தில் கலந்து கொள்ளப் போவதாக கூறினன்.





அட்லாண்டாவும் ஹிப்போமெனலை தம் மனத்துள் விரும்பத்தான் செய்தாள். அவனைப் பந்தயத்தில் கலந்து கொள்ள சொல்லவும் மனம் இல்லே. வேண்டாம் என்று சொல்லவும் முடியவில்லே. ஹிப்போமெனஸ் தனிமையில் வீனஸ் தேவதையைத் தியானித்தான்.

அந்த தேவதையும் மகிழ்ந்து அவன் முன் தோன்றியது. அது அவனுக்கு மூன்று ஆப்பிள் பழங்களைக் கொடுத்து அவன் என்ன செய்ய வேண்டும் எனக் கூறியது. ஹிப்போமெனஸும் மிகவும் மகிழ்ந்து அதனை பணிவுடன் வணங்கி அப்பழங்களைப் பெற்றுக் கொண்டான்.





அட்லாண்டாவுக்கும் ஹிப்போமெனஸிற்கும் இடையே பந்தயம் நடக்கலாயிற்று. அதனைக் காண பலர் கூடி விட்டனர். ஓட்டப் பந்தயம் ஆரம்பமானதும் அட்லாண்டா ஹிப்போமெனஸ்பால் கொண்ட அன்பை மறந்தாள். அவள் அவனை முந்தும் போது ஹிப்போமெனஸ் ஒரு ஆப்பிளை அவள் முன் போட்டான்.

அந்த அதிசய ஆப்பிளை அட்லாண்டா கண்டு அதை எடுத்துப் பார்த்தாள். இதற்குள் ஹிப்போமெனஸ் அவளை முந்திக் கொண்டு ஓடினான். பந்தயத்தை பார்க்க வந்தவர்கள் கைதட்டி ஆர்ப்பரித்தனர்.





இதுபோல மேலும் இரண்டு தடவைகளில் ஹிப்போமெனஸ் இரண்டு ஆப்பிள்களைப் போட்டு அவனது வேகத்தைக் குறைத்து விட்டு அவளை முந்திச் சென்று பந்தயத்தில் வெற்றி பெற்றான்.

அட்லாண்டா தன்னை ஒருகுரல் முன்பு எச்சரித்ததைப் பொருட்படுத்தாமல் ஹிப்போமெனஸைப் மணந்து கொண்டாள். ஹிப்போமெனஸ் வீனஸ் தேவதையின் கோவிலுக்குப் போய் நன்றி செலுத்தி இருக்க வேண்டும் அல்லவா.? ஆனால் அவன் அவ்வாறு செய்யவில்லை.





இதனால் கோபம் கொண்ட வீனஸ் மற்றொரு தேவதை சைபெலா வாயிலாகச் சாபம் கொடுத்தது. அச்சாபத்தின்படி அட்லாண்டாவும் ஹிப்போமெனஸும் சிங்கங்களாக மாறிப் போயினர். அந்தக் குரல் எச்சரித்தபடி விபரீதம் நடந்து விட்டது.





# நன்றி மறந்தானே!

வெகு காலத்திற்கு முன் ரோமாபுரியை யூனுஸ் என்ற சக்கரவர்த்தி ஆண்டு வந்தான். அவன் சக்தி மிகுந்தவன். அவனுக்குப் பல சிற்றரசர்கள் அடங்கி இருந்தனர். ஆனால் அவன் ஒருவிதத் தோல் வியாதியால் அவஸ்தைப்பட்டான். அந்நோயைத் தீர்க்க எவ்வளவோ பிரபல வைத்தியர்கள் முயன்றனர். ஆனால் அதைத் தீர்க்க முடியவில்லை.

இப்படியே நான்கைந்து வருடங்கள் கழிந்தன. யூனுஸ் தன் நோயை போக்க உலகில் ஒரு வைத்தியனுமா இல்லை என்று எண்ணிக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கையில் அவனைக் காண ரய்யூஸ் என்ற ஒரு கிழ வைத்தியன் வந்தான். அவன் எல்லா வைத்திய முறைகளையும் நன்கு கற்றுணர்ந்தவன். அவன் யூனுஸிடம் "சக்கரவர்த்தி அவர்களே! தங்களது நோய் பற்றிக் கேள்விப்பட்டேன். அதை நான் மிக எளிதில் போக்குகிறேன். இதற்கு நீங்கள் மருந்து உட்கொள்ளவும் வேண்டாம். உடல் மீது தைலமும் பூசிக்கொள்ள வேண்டாம்" என்றான்.

யூனுஸும் அதைக் கேட்டு "அப்படியா? நீங்கள் மட்டும் என் நோயைக் குணப்படுத்திவிட்டால் ஏராளமான பரிசுகளை அளிக்கிறேன்" என்றான். ரய்யூஸும் "நான் சொல்கிறபடி செய்யுங்கள். நீங்கள் 'போலோ' விளையாட்டு விளையாட நான் பந்தடிக்கும் கோலை விசேஷ முறையில் தயாரித்துக் கொடுக்கிறேன். நீங்கள் குதிரை மீது அமர்ந்து அதனால் பந்தை அடியுங்கள். உங்கள் உள்ளங்கை நன்கு வியர்க்கும் வரை விளையாடிவிட்டு வந்து ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். பிறகு பாருங்களேன்" என்று கூறிப் போலோ பந்து அடிக்கும் கோலைக் கொடுத்தான்.

-ரோமானியப் பழங்கதை-




கைப் பிடியில் சிறிய ஓட்டை இருந்தது. கோல் குடையப்பட்டு உள்ளே விசேஷ முறையில் தயாரிக்கப்பட்ட மருந்து வைக்கப்பட்டிருந்தது.

யூனுஸும் கிழ வைத்தியன் கொடுத்த கோலால் 'போலோ' விளையாடினான். வெகுநேரத்திற்குப் பிறகு அவனது உள்ளங்கை வியர்த்தது. அதன் பிறகு அவன் விளையாட்டை முடித்துவிட்டு ஓய்வு எடுக்கச் சென்றான். கிழ வைத்தியன் மறுநாள் வந்து அவனைப் பார்ப்பதாகக் கூறிச் சென்றான்.

யூனுஸ் நன்கு தூங்கிவிட்டு மாலை கண்விழித்துப் பார்த்தபோது தன் தோல் நோய் முற்றிலும் மறைந்து போனது கண்டு ஆச்சரியமும் ஆனந்தமும் அடைந்தான். மறுநாள் தர்பாரில் தன்னைக் காணக் கிழவைத்தியன் வந்தபோது அவனை வெகுவாகப் புகழ்ந்து பாராட்டி ஏராளமான பரிசுகளை அளித்து "இன்று முதல் நீங்கள் என் ஆஸ்தான வைத்தியர்" என்று கூறினான்.

சக்கரவர்த்தி ஒரு வைத்தியனுக்கு இவ்வளவு விலையுயரந்த பொருள்களை பரிசாக அளிப்பதா என்று அந்நாட்டு மந்திரி பொறாமைப்பட்டான். அன்று மாலையே அவன் சக்கரவர்த்தியைத் தனிமையில் சந்தித்து "நீங்கள் முன் பின்யோசியாமல் அந்த வைத்தியனை ஆஸ்தான வைத்தியனாக நியமித்து விட்டீர்களே" என்றான்.

யூனுஸும் "ஏன்? அதில் என்ன

யூனுஸ் அந்தப் பந்தடிக்கும் கோலை வாங்கிக் கொண்டான். அதுவரை அவனுக்கு வைத்தியம் செய்தவர்கள் எல்லாம் பத்தியம் சொல்லி உட்கொள்ள மருந்து கொடுத்தார்கள். உடல்மீது தடவத் தைலமோ களிம்போ கொடுத்தார்கள். அவற்றால் ஒரு பயனும் ஏற்படவில்லை. அப்படி இருக்கையில் இந்தக் கிழவன் ஒருகோலைக் கொடுத்து அதைப் பிடித்துக் கொண்டு விளையாடினால் நோய் போய்விடும் என்கிறானே! இது என்ன விசித்திர சிகிச்சை! இதையும் பார்க்கலாம் என அவன் நினைத்து அதற்குச் சம்மதித்தான்.

அந்தக் கோலின் ஒரு நுனியில் பந்தை அடிக்க சம்மட்டி போல சிறிய வடிவம் இருந்தது. மற்ற நுனிக்

தவறு? அவன் எவ்வளவு திறமை யானவன்! என் நோயைப் போலோக் கோலைப் பிடிக்க வைத்துப் போக்கி விட்டானே! ஆகா? என்ன அபூர்வ முறை" என்றான். அப்போது மந் திரி "அதை விளக்கத்தான் இப் போது வந்தேன். தங்கள் நோயை ஒரு கோலைப் பிடிக்க வைத்துப் போக்கியது போல அவன் வேறு ஏதாவது ஒரு பொருளைத் தங்களி டம் கொடுத்துத் தொடச் சொல்லித் தங்களது உயிரையே போக்கி விட லாமே. அவன் வைத்தியன் மட்டும் அல்ல. தங்கள் எதிரிகளால் ஏவி விடப்பட்ட ஒற்றன். இதில் சந்தே கமே இல்லை" என்றான்.




யூனுஸும் சற்று யோசித்துவிட்டு "ஆமாம். நீ சொல்வது சரியே. இவனை ஒழித்து விட வேண்டும்" என்றான். மந்திரியும் "இதற்கு காலதாமதம் கூடாது. நாளையே அவனுக்கு மரண தண்டனை விதித்து விடுங்கள்" என்றான்.

மறுநாள் அந்தக் கிழ வைத்தி யன் தர்பாருக்கு வந்ததும் யூனுஸ் அவனைத்தன் முன் நிற்க வைத்து "நம்பத் தகுந்த சாட்சியங்களால் நீ என்னைக் கொல்ல வந்துள்ள ஒற் றன் என்பது உறுதியாகிவிட்டது. எனவே உனக்கு மரணதண்டனை விதிக்கிறேன். உன்தலை இன்னும் சற்று நேரத்தில் வெட்டப்படும்" என்றான். கிழ வைத்தியன் அதுகேட் டுத் திடுக்கிட்டான். நேற்றுப் புகழா ரம் சூட்டிய சக்கரவர்த்தி இன்று மரணதண்டனை விதிக்கிறான் என்றால் யாரோ அவன் மனதைக் கலைத்து விட்டார்கள் என்பது அவனுக்குப் புரிந்து விட்டது.

அவன் சுற்றிலும் பார்த்தான். அப்போது மந்திரி விஷமப் புன்னகை புரிவதை அவன் கண்டுவிட்டான். அப்போது கிழவைத்தியன் தன் மன தில் "ஓகோ! இவன்தான் சக்கர வர்த்தியின் மனதைக் கெடுத்தவனா? சக்கரவர்த்தியும் நன்றி மறந்து இவன் பேச்சை நம்பி எனக்கு தண்டனை அளிக்கிறானா? செய்நன்றி கொன்றவனுக்கு இவ்வுலகில் உய் வில்லை" என நினைத்து ஒரு முடி வுக்கு வந்தான்.

அவன் அமைதியாக "சரி, நான்

என்ன சொன்னலும் நீங்கள் நம்பப் போவதில்லே. நீங்கள் விதிக்கும் தண்டனையை ஏற்கிறேன். நான் இறக்குமுன் என் அரிய பொக்கிஷமான வைத்தியப் புத்தகங்களைத் தங்களிடம் கொடுக்க நினைக்கிறேன். அவற்றில் ஒன்றில் நீங்கள் என் தலையை வெட்டிய பிறகும் அதோடு பேசக் கூடிய முறையும் விவரிக்கப் பட்டுள்ளது'' என்முன்.

யூனுஸும் "இப்படியும் ஒரு அதிசய முறையா! இந்தக் கிழவன்தான் என்னென்ன அதிசயங்கள் புரிகிமுன்! வெட்டப்பட்ட தலே பேசுமா? அதைப் பார்க்க வேண்டும்'' என்று தன் மனதில் நினைத்துக் கொண்டான்.

அந்த அதிசய முறையைத் தெரிந்துக் கொள்ளும் ஆவலில் யூனுஸ் உடனே அப்புத்தகங்களைக் கொண்டு வர ஒரு வீரனை அனுப்பினுன். அப்புத்தகங்கள் கொண்டு வரப்பட்டு யூனுஸ் முன் வைக்கப்பட்டன. அப்போது அக்கிழ வைத்தியன் ஒரு புத்தகத்தைச் சுட்டிக்காட்டி "அதில்தான் அந்த முறை விவரிக்கப்பட்டுள்ளது. எடுத்து பாருங்கள்'' என்முன்.

யூனுஸ் அப்புத்தகத்தை எடுத்துப் பிரித்தான். அதன் பக்கங்கள் ஒன்ருேடு ஒன்று ஒட்டிக் கொண்டிருந்தன. அவற்றைப் பிரித்துத் தள்ள அவன் தன் கைவிரலேத் தன் நாக்கில் தடவிப் பின் சில பக்கங்களைத் தள்ளினுன். அப்போது வைத்தியன் "இன்னும் பத்து பக்கங்கள் தள்ளுங்கள். அப்போது அந்த முறையைக் காணலாம்'' என்முன்.

யூனுஸ் ஒவ்வொரு பக்கத்தையும் புரட்ட தன் கைவிரலேத் தன்நாக்கில் தடவிப் பக்கங்களைத் தள்ளினுன். அவன் அவ்வாறு செய்து கொண்டிருக்கையில் அவன் தலே தொங்கிப் போயிற்று. பொத்தென அவன் கீழே விழுந்து இறந்து போனுன்.

இவ்விதமாக மந்திரியின் பொருமையால் யூனுஸ் அவன் பேச்சைக் கேட்டுத் தன் உயிரையே இழந்தான். செய் நன்றி மறந்தால் தக்க தண்டனேயே கிடைத்தது.






இராவணன் கூறியதைக் கேட்ட சீதை மிகவும் கோபம் கொண்டாள். அவனை அலட்சிமாகக் கருதித் தான் உட்கார்ந்திருந்த இடத்தருகே முளைத்திருந்த ஒரு புல்லைப் பிடுங்கி அதை இராவணனாக எண்ணிக் கூறலானாள்.

"அடே அற்பப்பதரே! நான் யார் தெரியுமா? கோசலமன்னர் தசரத சக்கரவர்த்தியின் மருமகள். ரகுகுலசிரோமணியின் மனைவி. நற்குலத்தில் பிறந்தவள். கற்பைப் பேணுபவள். தகாத செயல்களைச் செய்ய விரும்பாதவள். நான் பிறர் மனைவி. நீ உன் மனைவி எப்படி இருக்க வேண்டும் என்று நினைக்கிறாயோ அது போல மற்றவர் மனைவியும் இருக்க வேண்டும் என்பதை நினை. உனக்கு அறிவுரை கூற யாரும் இல்லாததால் இப்படிப் புத்தி கெட்டு அலைகிறாய். உனக்குக் கேடு காலம் வந்து விட்டது. உன்னால் இலங்கை அழியப் போகிறது. எனக்கு உன் அந்தப்புரமோ, பதவியோ, உன் ஐசுவரியமோ எதுவுமே வேண்டாம். என் கணவர் அந்த ரகுகுலத்திலகமே. நீ உயிருடன் இருக்க விரும்பினால் அவரோடு சமாதானம் செய்து கொள். அவர் தாராள மனப்பான்மை கொண்டவர். அதனால் உன் தவறுகளை மன்னித்து விடுவார். அதனால் தூய மனதுடன் என்னை நீ அவரிடம் ஒப்படைத்து விடு. நீ என்னை திருட்டுத்தனமாய்க் கவர்ந்து வந்தாய். நீ மட்டும் நான் சொன்னபடி செய்யாவிட்டால் உன்னை என்

—திரிசடையின் கனவுகள்—



கணவரும் அவர் தம்பி இலட்சுமணனும் கொல்வது நிச்சயம்'' என்ருள்.

இதைக் கே. ட இராவணன் கடுங்கோபம் செ . ண்டான். அவன் சீதையைப் பார்த்து ''ஏய் சீதையே! நீ இப்படி எல்லாம் பேசியதற்காக உன்னைக் கண்ட துண்டமாக வெட்டிப் போட்டிருப்பேன். ஆனல் உன்மீது கொண்ட ஆசையால் அவ்வாறு செய்ய எனக்கு மனம் வரவில்லை. எனக்குக் கோபம் வந்த போதிலும் அதை அடக்கிக் கொண்டிருக்கிறேன். நான் உனக்கு அளித்த கெடு முடிய இன்னும் இரண்டு மாதங்களே உள்ளன. அதற்குள் நீ என் இச்சைப்படி நடந்தால் சரி. இல்லாவிட்டால் உன்னை தயை தாட்சணியம் பாராமல் கொன்று விடுவேன்'' எனக்கூறினன்.

இராவணன் இப்படிக் கூறியது சீதையோடு இருந்த சில ராட்சஸப் பெண்களுக்குப் பிடிக்கவில்லை. ஆனல் இராவணன் அங்கிருந்த பயங்கர ராட்சஸப் பெண்களிடம் ''இந்தச் சீதையை என் இச்சைப்படி நடக்க வேண்டும் எனக்கூறி வற்புறுத்த வேண்டும். இதை நயத்தாலோ பயத்தாலோ செய்து முடிக்க வேண்டும்'' என்ருன்.

அப்போது இராவணனேடு இருந்த அவனது மனைவிகளில் ஒருத்தியான தான்யமாலினி என்ற ராட்சஸி அவனைக் கட்டிக் கொண்டு ''நான் உங்கள் மனைவியாக இருக்கையில் நீங்கள் இந்த மானிடப் பெண்ணை ஏன் மணந்து கொள்ள வேண்டும்? உங்களுக்கு மனைவியாகும் அதிர்ஷ்டம் இவளுக்கு இல்லை. அதனல்தான் உங்களை இவள் நிராகரிக்கிருள். இஷ்டப்படாதவளை விரும்புவதில் என்ன பயன்?'' என்ருள்.

இராவணன் அவள் கூறியதைக் கேட்டுச் சிரித்தான். பிறகு தன்னை விடுவித்துக் கொண்டு அவன் அங்கிருந்து சென்ருன். அவன் போனதும் இராட்சஸப் பெண்கள் சீதையைச் சூழ்ந்து கொண்டு அவளைத் திட்டலானர்கள். அவர்களில் ஏகசடை, ஹரிசடை, விகடை, துன்மதி என்பவர்கள் இராவணனது அருமை

பெருமைகளை எடுத்துக்கூறி சீதை அவனை மணக்க மறுப்பது அறிவற்ற செயல் என்று கூறினார்கள்.

சீதையோ "இப்படிச் சொல்வது மகாப்பாவம் என்று உங்களுக்கெல்லாம் தெரியவில்லையா? நீங்கள் எல்லோரும் என்னை சித்திரவதை செய்தாலும் நான் உயிர்விடத் தயார். ஆனால் அந்த இராவணனை மட்டும் மணக்க மாட்டேன்" என்றாள்.

அப்போது ராட்சஸப் பெண்கள் சீதையை பயமுறுத்தினார்கள். அவர்கள் கூறியதை எல்லாம் மரத்தின் மீதிருந்த அனுமார் கேட்டுக் கொண்டிருந்தார். சீதை ராட்சஸப் பெண்களோடு வந்து அவர் உட்கார்ந்திருந்த சிம்சுகமரத்தின் கீழ் அமர்ந்தாள்.

அப்போது வினதை என்ற ராட்சஸி "நீ நல்லவள், கற்புடையவள் என்றெல்லாம் இருந்தாலும் இப்போதைய நிலைமையைப் பார். இராவணன் அழகன். மூவுலகின் சக்கரவர்த்தி அவனை மணந்து கொண்டு சுகமாய் இரு. இராமன் காட்டில் திரிபவன் அவனால் இவ்வளவு சுகங்களையும் கொடுக்க முடியுமா என்ன? அவனை மறந்து விடு" என்றான்.

வேறொருத்தியோ "முதலில் இவளைக் கொன்று தின்போம். பிறகு இராவணனிடம் போய் சீதை இறந்து விட்டாள் என்றால் அவ



னும் அவளைத் தின்றுவிடும்படிக் கூறிவிடுவான். பிரச்னை தீர்ந்தது" என்றாள். இப்படியாக ஆளுக்கு ஒன்றாக ராட்சஸப் பெண்கள் கூறலானார்கள்.

இதை எல்லாம் கேட்டு சீதை மிகவும் வருந்தினாள். அவள் இராமர், இலட்சுமணன், கௌசல்யை சுமித்திரை ஆகியோரை நினைத்துக் கண்ணீர் வடித்தாள். இனி தனக்கு மரணத்தைத் தவிர வேறு வழி இல்லை என அவள் எண்ணினாள்.

அது வரை எதுவும் பேசாமல் படுத்திருந்த திரிசடை என்ற ராட்சஸி மற்றவர்களைப் பார்த்து "என்ன இது? வாய்க்கு வந்தபடி ஏதேதோ சொல்கிறீர்களே. நேற்றிரவு நான் கண்ட கனவுகளைக்



கூறினுல் நீங்கள் எல்லாம் பயந்து போவீர்கள் ராட்சஸர்களுக்குத் தோல்வியும் இராமருக்கு வெற்றியும் கிடைத்தாக அவை அறிவித்தன" என்ருள்.

அதைக் கேட்ட ராட்சஸப் பெண்கள் "கனவுகளா? அதுவும் கெட்ட கனவுகளா? விவரமாகச் சொல்" என்று ஆவலுடன் கேட்டார்கள். திரிசடையும்தான் கண்ட கனவுகளைக் கூறலாஞள்.

இராமர் வெண்மலர் மாலைகளை அணிந்து வெண் பட்டாடைகளை உடுத்தி பல்லக்கில் அமர்ந்து இலங்கைக்குள் பிரவேசித்தார். அந்தப் பல்லக்கை ஆயிரம் அன்னப் பறவைகள் ஆகாயம் மார்க்கமாய்க் கொண்டு வந்தன. அதில் இலட்சுமணனும் இருந்தான். சீதையும் பட்டாடைகளை அணிந்து உயரிய மலை மீது நின்று கொண்டிருந்தாள். இராமர், சீதை, இலட்சுமணன் ஆகிய மூவரும் ஒரு யானை மீது ஏறி கம்பீரமாகச் சென்றனர். அதன் பின் இராமர் சீதையுடனும் லட்சுமணனுடனும் புஷ்பக விமானத்தில் அமர்ந்து வட திசையில் போவதாகக் கண்டேன். இராவணனே அரளி மாலை அணிந்து உடம்பு முழுவதும் எண்ணெயைப் பூசிக் கொண்டு தொப்பென மேலிருந்து கீழே விழுந்தது. போலக் கண்டேன். மற்ருெரு முறை அவன் புஷ்பக விமானத்திலிருந்து கீழே விழுந்தது போலும் தலை மொட்டையாகி விட்டது போலும் கண்டேன். அவன் கறுப்பான ஆடைகளை அணிந்திருப்பது போலவும் அவனை யாரோ ஒரு பெண் இழுத்துக் கொண்டு போவது போலவும் கண்டேன். அவன் கழுதை மீது ஏறித் தென் திசையில் செல்வதாகவும் கண்டேன். கும்பகர்ணனும் இதுபோலச் செல்வதைப் பார்த்தேன். இராவணனின் புதல்வர்கள் தம்மீது எண்ணெயை எடுத்துப் பூசிக் கொள்வதைப் பார்த்தேன். இராவணன் பன்றி மீதும் இந்திரஜித் முதலை மீதும் கும்பகர்ணன் ஒட்டகத்தின் மீது அமர்ந்து தென்திசையில் செல்வது போலக் கண்டேன். வீபீஷணன் ஒருவன் மட்டும் வெண்



யைக் கண்டு எவ்வாறு ஆறுதல் கூறுவது என்று யோசிக்கலானுர். தான் அங்கு இருப்பதை அந்த ராட்சஸப் பெண்கள் அறிந்து விட்டால் ஆபத்துதான். அவர்கள் இராவணனிடம் போய்ச் சொல்வார்கள். அவன் ராட்சஸர்களே அனுப்புவான். அவர்களோடு சண்டையிட வேண்டும். பிறகு திரும்பி இராமரிடம் செல்ல வேண்டும். மேலும் முக்கியமான விஷயம் தன்னே இராமரிடமிருந்து வந்துள்ளவன் என்பதை சீதை நம்ப வேண்டும்.

என்ன செய்யலாம் என யோசித்து அவர் ஒரு வழியையும் கண்டு பிடித்து விட்டார். அவர் ராட்சஸப் பெண்கள் அயர்ந்து தூங்கிக் கொண்டிருப்பதைக் கண்டார். அதனுல் அவர் சீதையின் காதில் விழும்படியாகப் பின்வருமாறு கூறினுர்.

"அயோத்தி மாநகரில் இக்ஷ்வாகு வம்ச மன்னர் தசரதர் ஆட்சி புரிந்து வந்தார். அவரது மூத்த மகன் இராமன். அவனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய தசரதர் ஏற்பாடு செய்தபோது அவரது இரண்டாவது மனேவி கைகேயி தான் அடைந்த இரு வரங்களால் தசரதரிடமிருந்து இராமன் பதிநான்கு ஆண்டுகள் காட்டிற்குப் போகவும் கைகேயியின் மகன் நாடாள வேண்டும் என்ற வாக்கு பெற்றுள். இதனுல் தந்தை சொல்லே ஏற்று இராமன் தன்

மலர் மாலேகளே அணிந்தும் வெண் பட்டாடைகள் உடுத்தியும் தன் நான்கு மந்திரிகளுடன் ஒரு யானே மீது கம்பீரமாக அமர்ந்து செல்லக் கண்டேன். இலங்கையே கடலில் மூழ்கிப் போனது போலவும் கண்டேன்.

இப்படியாக திரிசடைதான் கண்ட கனவுகளே விவரித்துக் கொண்டே போனுள். பிறகு அவள் அவர்களிடம் "நாம் எல்லோரும் சீதையிடம் நல்லவிதமாக நடந்து கொண்டு நம்மை நாம் காத்துக் கொள்வோம்" என்றுள்.

மரத்தின் மீதிருந்த அனுமார் எல்லாவற்றையும் பார்த்தும் அவர்கள் பேசியதை எல்லாம் கேட்டுக் கொண்டும் இருந்தார். அவர் சீதை

மனைவி சீதையுடனும் தம்பி இலட்சுமணனுடனும் காட்டிற்குச் சென்ருன். அவன் ஜனஸ்தானத்தில் பல ராட்சஸர்களைக் கொன்ருன். இதைக் கேட்ட இராவணன் மாயா சக்தியால் பொய்மானை சீதைக்குக் காட்டி இராமனும் இலட்சுமணனும் இல்லாத நேரத்தில் அவளைக் கவர்ந்து சென்ருன். இராமன் சீதையைத் தேடியவாறே சென்று சுக்கிரீவன் என்ற வானர மன்னனைக் கண்டு அவனேடு நட்பு கொண்டான். இராமன் வாலி என்ற வானர மன்னனைக் கொன்று சுக்கிரீவனை மன்னனுக்கினுன். சுக்கிரீவனின் கட்டளைப்படி ஆயிரக் கணக்கான வானரர்கள் சீதையைத் தேடிக் கொண்டு நான்கு திசைகளிலும் சென்ருர்கள் அவர்களில் ஒருவனுன நான் மாபெரும் கடலைக் கடந்து இங்கு வந்தேன். இராமர் வர்ணித்தபடியே உள்ள சீதாதேவியையும் கண்டேன்.''

இப்படிச் சொல்லி அனுமார் நிறுத்தினுர். அவர் கூறியதைக் கேட்ட சீதை ஆச்சரியத்தால் பிரமித்துப் போனுள். அவள் தன் தலையை நிமிர்த்தி மரக்கிளைகளைப் பார்த்தாள். கூர்ந்து கவனித்ததில் கிளைகளுக்கிடையியே அனுமார் உட்கார்ந்திருந்தது அவளுக்குத் தெரிந்தது.

அனுமாரைக் கண்ட சீதை முதலில் சற்று பயப்பட்டாள். ஒரு குரங்கையா பார்க்க வேண்டி வந்தது என எண்ணி அவள் மனம் வருந்தலானுள். இராமரது கதையை அது கூறியதைக் கேட்டதும் அவளது கண்களிலிருந்து கண்ணீர் பெருகியது. இலங்கையில் இராமர் கதையை ஒரு வானரம் கூறுவதும் திரிசடை தான் கண்ட கனவுகளையும் கூறியதையும் சேர்த்துப் பார்த்து சீதை இது நல்ல காலத்திற்கு அறிகுறியே என எண்ணினுள்.



அவளுக்குத் தான் காண்பது கனவா அல்லது நனவா என்ற சந்தேகம் கூட வந்து விட்டது. ஆனுல் தான் தூங்கவில்லையாதலால் அது கனவல்ல என்பது அவளுக்கு உறுதியாயிற்று. எல்லாம் நல்லபடியாக நடக்க வேண்டும் என்று இஷ்ட தெய்வங்களை எல்லாம்

அவள் வேண்டிக் கொண்டாள்.

அப்போது அனுமார் மரத்தின் மீதிருந்து கீழே குதித்து சீதை இருந்த இடத்தை அடைந்தார். இருகை களைக் கூப்பி அவளை அவர் வணங்கி "தாயே கற்புக்கரசியே! தாங்கள் யாரென்று நான் அறிய லாமோ? இங்கு இந்த ராட்சஸப் பெண்களின் மத்தியில் எப்படி வந்தீர்கள்? ஏன் கண்ணீர் வடிக் கிறீர்கள்? உங்களைப் பார்த்தால் தெய்வாம்சம் கொண்டவராகத் தெரிகிறது. உங்கள் தாய் தந்தை, கணவன், மகன், சகோதரன் என்று யாருமே இங்கு இல்லையா? ஒரு வேளை இராவணன் ஜனஸ்தானத் திலிருந்து அபகரித்து வந்த சீதா தேவி தாங்கள்தானோ?" என்று பணிவுடன் கேட்டார்.

அதைக் கேட்ட சீதை பின்வரு மாறு கூறலானாள்: "நான் தசரத சக்கரவர்த்தியின் மூத்த மருமகள். விதேக மன்னர் ஜனக மகாராஜ ரின் புதல்வி சீதை. தசரத மன்ன ரின் மூத்த மகனை மணந்து அயோத் திக்கு வந்தேன். என் கணவரின் பட்டாபிஷேகம் நடக்க இருந்தது. ஆனால் தசரதரின் இளைய மனைவி கைகேயி தன் கணவனிடம் கேட்ட வரத்தின் பயனாக என் கணவர் தன் தந்தையின் வாக்கைக் காக்கப் பதிநான்கு வருஷ வனவாசத்தை ஏற்றார். நானும் என் கணவரின் தம்பி இலட்சுமணனும் அவரைப் பிரிந்திருக்க முடியாமல் அவரோடு காட்டிற்குச் சென்றோம். நாங்கள் தண்டகாரண்யத்தில் இருக்கும் போது கயவனான இராவணன் என்னை கவர்ந்து கொண்டு இங்கே வந்து விட்டான். அவன் தன்னை மணந்து கொள்ள வேண்டும் என்று என்னை வற்புறுத்தி வருகிறான். அவன் கொடுத்த கெடு முடிய இன்னும் இரண்டு மாதங்களே உள்ளன. அதற்குப் பிறகு நான் இறக்கத்தான் போகிறேன்."

இவ்வாறு சீதை கூறியது கேட்டு அனுமார் அவளுக்கு ஆறுதல் கூற லானார்.





# அடித்தது யோகம்!

வெள்ளையூர் என்ற கிராமத்தில் வெள்ளையன் என்ற இளைஞன் இருந்தான். திடீரென்று அவனது தாய் தந்தையர் இறந்து போனதால் அவன் தன் தாய் மாமனின் வீட்டில் இருக்க வேண்டியதாயிற்று. அவனது மாமி காளியம்மாளோ உண்மையில் பத்திரகாளிதான். மகா வாயாடி. வீட்டின் கூடத்து ஊஞ்சல் பலகையில் உட்கார்ந்து கொண்டு எல்லோரையும் மிரட்டிக் கொண்டே இருப்பாள். தன்பக்கத்தில் ஒரு முறத்தில் வேர்க்கடலையை வைத்துக் கொர்ண்டு கொஞ்சம் கொஞ்சமாக எடுத்து வாயில் போட்டு அசை போட்டுக் கொண்டே இருப்பாள்.

அவள் வெள்ளையன் தன் வீட்டிற்கு வந்ததும் வீட்டில் வேலை செய்து கொண்டிருந்த இரண்டு வேலைக்காரர்களையும் நிறுத்தி விட்டாள்.

அதனால் எல்லா வேலைகளையும் வெள்ளையனே செய்ய வேண்டியதாயிற்று. வீட்டைப் பெருக்கி, பாத்திரங்களைத் தேய்த்து, துணிகளைத் துவைத்து உலர்த்தினான். மாட்டுத் தொழுவத்தில் மாடுகளுக்குத் தீவனம் போட்டு அவற்றைக் குளிப்பாட்ட வேண்டியதும் அவன் வேலை. இவை போக கடை, சந்தைகளிலிருந்து வீட்டிற்கு வேண்டிய சாமான்களையும் அவன்தான் வாங்கி எடுத்து வரவேண்டும்.

இப்படி மாடு போல உழைத்து அவன் அவ்வீட்டில் இருக்க வேண்டியதாயிற்று. கடும் வேலைகளைச் செய்து கொண்டே இருந்ததால் அவனுக்கு பக்கவாத நோய் கண்டு அவனது வலது கையே செயலற்றுப் போயிற்று. அப்போதும் காளிக்கு அவன் மீது சற்றும்

-பாபநாசம் சாமா-



சுமந்து வா. வாடகை வண்டியில் போட்டுக் கொண்டு வந்து விடாதே. அந்தப் பணம் தண்டச் செலவு'' என்று எச்சரித்து அனுப்பினுள்.

வெள்ளையன் என்ன செய்வான்? அவள் கூறியபடி செய்தாக வேண்டும். தலைநகரிலிருந்து வேர்க்கடலை மூட்டையைச் சுமந்து கொண்டு நடந்தே வரவேண்டும்! அவன் அதற்கு சம்மதித்தான். ஏனென்ருல் ஒரு சில நாட்களாவது எல்லா வேலைகளையும் செய்ய வேண்டாமே.

தலைநகர் போவதென்ருல் பல ஊர்கள் வழியாகப் போய் ஒரு பயங்கரக் காட்டையும் கடந்து சென்ருக வேண்டும். அந்தக் காட்டிற்குள் போக யாருமே பயப்படுவார்கள். ஆனுல் வெள்ளையன் அதைக் கடந்து தலைநகர் போய் ஒரு மூட்டை வேர்க்கடலை வாங்கினுன். பிறகு அதைத் தன் முதுகில் சுமந்து கொண்டு காட்டின் வழியேதன் ஊருக்குத் திரும்பிப் போகலானுன்.

வெயில் அதிகமானதால் அவன் காட்டில் ஒரு மரத்தடியே வேர்க்கடலை மூட்டையை இறக்கிவிட்டு அதன் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான். அப்போது பரட்டைத் தலையுடன் அழுக்கான ஆடைகளை அணிந்து கருப்பு நிறக் கிழவி ஒருத்தி அங்கு வந்தாள்

இரக்கம் கொள்ளவில்லை. இடது கையால் அவனை எல்லா வேலைகளையும் செய்யச் சொன்னுள். இப்படியாக அவள் எல்லா வேலைகளையும் வெள்ளையன் மீது சுமத்தினுள். அவன் செய்யும் வேலைகளில் அது சொத்தை, இது சொள்ளை என்று ஏதாவது குறை கூறிக் கொண்டே இருந்தாள்.

ஒருமுறை மழை பெய்யாமல் போகவே அந்தப் பகுதியில் வேர்க்கடலை விளைச்சலே இல்லாது போயிற்று. காளிக்கோ எப்போதும் அசை போட வேர்க்கடலை வேண்டுமே அதனுல் வெள்ளையனைக் கூப்பிட்டு ''நீ தலை நகருக்குப் போய் ஒரு மூட்டை வேர்க்கடலை வாங்கி உன் முதுகிலேயே

அவள் உடல் மெலிந்து கைத் தடியை ஊன்றிக் கொண்டு சிர மப்பட்டு நடந்தாள்.

அவள் வெள்ளையனைப் பார்த்து "யாரடா நீ! நான் பாடு பட்டு வளர்த்துப் பெரிதாக்கின இந்த மரத்தின் கீழ் என் அனுமதி இல்லாமல் நான் உட்காரும் இடத் திலேயே மரியாதை இல்லாமல் உட்கார்ந்திருப்பது?" என்று அதட் டிக் கேட்டாள்.

வெள்ளையன் அவளைக் கண்டு பயப்பட்டான். பிறகு சமாளித்துக் கொண்டு தைரியத்துடன் "நான் தான் பாட்டி வெள்ளையன். உன்னை யும் என் மாமி காளியையும் பார்த் தால் கடுகுக்கும் மலைக்கும் உள்ள வித்தியாசம் போல இருக்கிறதே" என்றான். கிழவியோ "என்னைப் பார்த்தாலே எல்லோரும் நடுங்கு வார்களே. நான் கேட்டதற்குப் பதில் சொல்லாமல் ஏதோ காளி, கீளி என்று சொல்கிறாயே" என்றாள்.

அதைக் கேட்ட வெள்ளையன் தலையைச் சொரிந்தவாறே "இல்லை பாட்டி! என் மாமி வேர்க்கடலை சாப்பிட்டே மலைபோலப் படுத் திருக்கிறாளே. நீயோ ஒல்லியாக இருக்கிறாய். நீயும் வேர்க்கடலை சாப்பிட்டுக் கொண்டே இருந் தால் என் மாமி காளியைப் போலப் பருமனாகி விடலாமே. உனக்கு வேர்க்கடலை பற்றித் தெரியாதா?" என்று கேட்டான்.



கிழவியும் "ஆமாம். நீ சொல் வது சரிதான். உன் பக்கத்தில் இருப் பது என்ன மூட்டை? வேர்க் கடலையா?" என்று கேட்டாள். வெள்ளையனும் "ஆமாம். இதை என் மாமி காளிக்காகச் சுமந்து கொண்டு போகிறேன்" என்றான்.

கிழவியும் "ஓ! அப்படியானால் இந்த வேர்க்கடலை மூட்டையை எனக்குக் கொடுத்துவிடு. உனக்குப் புண்ணியம் உண்டு" என்றாள். வெள்ளையனோ "ஐயோ! நான் மாட்டேன். என் மாமி காளி நான் இந்த மூட்டை இல்லாது போனால் என்னைக் கொன்று விடுவாள்" என்றான்.

கிழவியும் "நீ மட்டும் எனக்கு இந்த வேர்க்கடலை மூட்டையைக்



கொடுத்தால் நிமிஷத்திற்கு ஒரு முட்டை வீதம் போட்டுக் கொண்டே இருக்கும் ஒரு அதிசயப் பெட்டைக் கோழியை நான் உனக்குக் கொடுக்கிறேன்'' என்ருள்.

வெள்ளேய்யனும் "ஓகோ! நீ மந்திரக் கிழவியா? நான் இந்தக் கோழியைக் கொண்டு போனுல் என் மாமி இதை வாட்டித் தின்று விடுவாளே'' என்ருன். அப்போது கிழவி "அப்படியானுல் அதோடு பாலுக்கு பதிலாகத் தண்ணீர் கறக்கும் பசு ஒன்றைக் கொடுக்கிறேன் இதுவும் அதிசயமானதே'' என்ருள். வெள்ளேய்யனே "தண்ணீர்தான் எங்கும் கிடைக்குமே. அதற்குப் பசு எதற்கு?'' எனவே கிழவியும் "இந்தப் பசுவும் சமயத்தில் உதவும். வறட்சியான இடங்களில் தாகத்திற்குத் தண்ணீர் கொடுக்கும். இவற்ருேடு பேசும் காக்காயைக் கொடுக்கிறேன். நீ இம் மூன்று பொருள்களாலும் நல்ல நிலேயை அடைவாய். உன் மாமி காளியிடமிருந்து விடுபடுவாய். அதனுல் இம்மூன்றையும் எடுத்துக் கொண்டு எனக்கு வேர்க்கடலே மூட்டைக் கொடு'' என்ருள்.

மாமி காளியிடமிருந்து விடுதலே கிடைக்கும் என்று கேட்டதும் அவன் துள்ளிக் குதித்தான் மந்திரக் கிழவியின் வார்த்தையில் நம்பிக்கை ஏற்பட்டது. அவன் வேர்க்கடலே மூட்டையைக் கொடுத்து விட்டு பெட்டைக் கோழியையும், பசுவையும், காக்காயையும் வாங்கிக் கொண்டான்.

அவன் அவற்ருேடு கிளம்பினுன். காக்கை அவன் பின்னுலேயே பறந்து வந்தது அது "கவலேப் படாதே. நீ என்னேக் கூப்பிட்டதும் உன் தோளின் மேல் உட்கார்ந்து விடுவேன்'' என்றது.

வெள்ளேய்யன் காட்டைக் கடந்து ஒரு ஊரை அடைந்தான். அப்போது மாலேப்பொழுது. மழை வேறு பிடித்துக் கொண்டதால் அவன் அவ்வூர்ச் சத்திரத்தில் தங்கினுன். அதற்குமுன் அங்கு ஒரு பிரபல வைத்தியன் அச்சத்திரத்தில் தங்கி இருந்தான். அவன்

வெள்ளையன் கொண்டு வந்த அதிசயக் கோழியைப் பார்த்து ஆச்சரியப்பட்டான். அவன் "இந்தக் அதிசயக் கோழியை எனக்கு விற்கிறாயா?" என்று கேட்டான்.

வெள்ளையனும் "அதிசயப் பொருளை யாராவது விற்பார்களா?" எனவே வைத்தியன் அவனை ஏற இறங்கப் பார்த்தான். பிறகு அவன் "இதோ பார். உன் வலதுகை சூம்பிப் போய் பயனற்றதாக இருக்கிறது எல்லா வேலைகளையும் நீ உன் இடது கையால் செய்கிறாய். நான் ஒரு தைலம் தடவி உன் வலது கையை இடது கை போல் பலமுள்ளதாகச் செய்கிறேன். அப்போது எனக்கு இந்த அதிசயக் கோழியைக் கொடுக்கிறாயா?" என்று கேட்டான்.

வெள்ளையனும் யோசித்துப் பார்த்தான். தன் வலது கை சரியாகி விட்டால் கஷ்டப்படாமல் எந்த வேலையையும் செய்து விடலாம். ஊருக்குத் திரும்பிப் போனால் தானே காளியிடம் அவஸ்தைப் பட வேண்டும். அங்கே போகாமல் வேறு எங்காவது போய்ப் பிழைத்துக் கொள்ளலாம் என்று அவன் நினைத்தான்.

வெள்ளையனும் "ஓ! என் வலது கையும் இடது கை போலாகி பலம் பெற்று விட்டால் இந்த அதிசயக் கோழியைக் கொடுக்கிறேன்" என்றான். வைத்தியனும் ஒரு தைலத்தை எடுத்து வெள்ளையனின் வலது கையில் தடவி நீவினான். ஒருமணிநேரத்தில் அவனது வலது கை இடது கை போலாகி





விட்டது. வெள்ளைய்யனும் அதிசயக் கோழியை வைத்தியனுக்குக் கொடுத்து விட்டான்.

மறுநாள் வெள்ளைய்யன் பசுவுடனும் காக்கையுடனும் அந்தச் சத்திரத்திலிருந்து கிளம்பினான். அவன் ஒரு மலை வழியே போகும்போது ஒரிடத்தில் ஒருவன் படுத்து முக்கி முனகி 'தண்ணீர் தாகம்' என்று கதறி கொண்டிருப்பது அவன் காதில் விழுந்தது. உடனே வெள்ளைய்யன் தன் பசுமாட்டின் மடியிலிருந்து தண்ணீர் கறந்து அந்த மனிதன் வாயில் விட்டான். அந்த மனிதனும் எழுந்து உட்கார்ந்து "ஆகா! நான் இறந்தே போவேன் என நினைத்தேன். தண்ணீர் கொடுத்து எனக்கு உயிர்ப் பிச்சை அளித்தாய். நான் ஒரு லட்சாதிபதி. இவ்வழியே நான் வந்தபோது சில திருடர்கள் என்னை அடித்துப் போட்டுவிட்டு என் பணத்தை எல்லாம் எடுத்துக் கொண்டு போய் விட்டார்கள் உன் பசுமாடு அதிசயமானது. அதை நான் விலைக்கு வாங்கிக் கொள்கிறேன். என்னோடு என் ஊருக்கு வா" என்றான்.

வெள்ளைய்யன் அப்போது தனக்குக் கடவுள் ஒரு வழியைக் காட்டி விட்டார் என்றும் அதிர்ஷ்டம் தன்னை அடைந்து விட்டது என்றும் எண்ணி அவன் அந்தப் பணக்காரரோடு சென்றான். போகும்போதே வழியில்தான் அவரிடமிருந்து பணத்தைப் பெற்றதும் அதை எப்படிப் பயன்தரத்தக்க விதத்தில் செலவு செய்ய வேண்டும் என்றும் திட்டம் போட்டுக் கொண்டான்.

வெள்ளைய்யனும் இவ்வாறு நினைத்து அவனோடு சென்றான். லட்சாதிபதி தன் ஊரை அடைந்ததும் பசுவை வெள்ளைய்யனிடமிருந்து வாங்கிக் கொண்டு ஒரு பை நிறையத் தங்க நாணயங்களைப் போட்டுக் கொடுத்தான். வெள்ளைய்யனும் அவனிடம் விடைபெற்றுக் கொண்டு ஒரு வெள்ளைக் குதிரையையும் பட்டாடைகளையும் வாங்கி உடுத்திக் கொண்டு தன் ஊருக்குப் போகாமல் குதிரை மீது அமர்ந்து தலைநகர் நோக்கிச் சென்றான். காக்கை அவன் பின்னாலேயே பறந்து சென்றது.

தலைநகரருகே ஒரு குன்றையும்

அதன் மீது ஒரு அழகிய கோவிலை யும் வெள்ளையன் கண்டான். அங்கு போய் கடவுளை தரிசிக்க அவன் தன் குதிரையை அக்குன்றின் மீது ஓட்டிக் அக்கோவிலை அடைந்தான். அதே சமயம் அந்நாட்டு அரசகுமாரி யும் கடவுளை வழிபட அங்கு தன் தோழிகளுடன் வந்திருந்தாள்.

அவள் வெள்ளையன் அணிந் திருந்த ஆடைகளையும், ஏறி வந்த குதிரையையும் பார்த்து அவன் எந்த நாட்டு இளவரசனோ என எண்ணித் திகைத்து அவனையே உற்றுப் பார்த்தாள்.

வெள்ளையனும் அவள் தன் னையே பார்ப்பது கண்டு "பெண்ணே! நீ யார்? ஏன் என்னையே பார்த்துக் கொண்டிருக்கிறாய்?" என்று கேட் டான். அதற்கு அரச குமாரியோ அவளது தோழிகளோ எவ்வித பதிலும் கூற வில்லை.

அப்போது வெள்ளையன் தன் பின்னால் பறந்து வந்த காக்கை யைக் கூப்பிடவே அதுவும் அவன் தோளின் மீது வந்து உட்கார்ந்தது. அவன் அதனிடம் "காக்கையே! அந்த அழகிய பெண் யாரென்று சொல்" என்றான். காக்கையும் "அவள் இந்நாட்டு அரசகுமாரி அவளோடு இருப்பவர்கள் அவளது தோழிகள்" என்று உரக்கக் கூறியது.

ஒரு காக்கை மனிதனைப் போலப் பேசியது கண்டு அந்த அரசகுமாரி ஆச்சரியப்பட்டாள். அவள் உடனே "ஆகா! என்ன அற்புதம்! இது வரை யாரும் செய்யாத ஒரு அற் புதச் செயலைச் செய்த ஒரு வாலி பனைக் கண்டுபிடித்து விட்டேன்"



என்று மகிழ்ச்சி ததும்பக் கூறி னள். அவள் உடனேயே தன் தோழி களோடு அவசர அவசரமாகக் கிளம்பிச் சென்றுள்.

வெள்ளையன் நிதானமாக அந்தக் கோவிலில் சுவாமி தரிசனம் செய்தான். சற்றுநேரம் அங்கே இருந்து விட்டு அவன் அங்கிருந்து கிளம்பும்போது அரசாங்க வீரர்கள் வந்து அவனை மரியாதையுடன் மன்னன் அழைத்து வரச் சொன்னதாகச் சொல்லி அவனை அரண்மனைக்கு அழைத்துச் சென்றுர்கள்.

வெள்ளையனைக் கண்டதும் மன்னன் "நீ காக்கையைப் பேச வைத்து அற்புதச் செயல் புரிந்தாய். இந்த மாதிரி ஒரு அற்புதத்தைச் செய்பவனையே என் மகள் மணக்கப் போவதாக இவ்வளவு நாட்களாகப் பிடிவாதமாக இருந்தாள். நீதான் என் மாப்பிள்ளை" என்று கூறி ஒரு நல்ல முகூர்த்தத்தில் அவளை வெள்ளையனுக்கு விவாகம் செய்து வைத்தான்.

காளிக்கு வெள்ளையன் அரசகுமாரியை மணந்த செய்தி தெரிந்தது. அவள் தலைநகருக்கு ஓடோடி வந்தாள். வெள்ளையனைக் கண்டு "வெள்ளையா! நீ அதிர்ஷ்டக்காரன். புத்திசாலி. அதனுல்தான் உனக்கு இப்படி உயர்ந்த அந்தஸ்து கிடைத்திருக்கிறது. உன்னை நான் என் வீட்டில் படாதபாடு படுத்தி விட்டேன். வீட்டு வேலைகளை எல்லாம் உன் மீது சுமத்தினேன். உன் ஒரு கை செயலற்றுப் போனதைக் கண்டும் உன்னை துன்புறுத்தினேனே. என்னை மன்னித்து விடு. என் மீது கோபம் கொண்டு பழிவாங்காதே. கடைசி கடைசியாக உன்னை வேர்க்கடலை மூட்டை சுமந்து வரும்படி சொன்னேனே. என்னை மன்னித்து விடு" என்றுள்.

வெள்ளையனும் சிரித்தவாறே "மாமி அப்படி நான் வேர்க்கடலை மூட்டை சுமந்து வந்ததால்தான் இந்த அதிர்ஷ்டம் எனக்குக் கிடைத்தது" என்றுன் சிரித்துக்கொண்டே.





# விசித்திர மருமகள்

ஒரு ஊரில் ஒரு பணக்காரர் இருந்தார். அவர் மனைவி வாயாடி. பத்திரகாளி. அவளது கடும் சொற்களைத் தாளமுடியாம்ல் அவளையும் தன் மூன்று மகன்களையும் விட்டு விட்டு சன்னியாசியாகி எங்கோ போய் விட்டார்.

மூத்த மகன் கல்யாணம் செய்து கொண்டு தன் மனைவியை அழைத்து வந்தான். ஆனால் மாமியார் படுத்திய பாட்டிலும் சொன்ன கடும் சொற்களிலும் ஆத்திரம் கொண்டு அவள் தன் கணவனை அழைத்துக் கொண்டுத் தன் பிறந்த வீட்டிற்கே போய் அங்கேயே நிம்மதியுடன் வாழலானாள்.

இரண்டாவது மகன் மணம் செய்து கொண்டு தன் மனைவியை அழைத்து வந்தான். மாமியார் அந்த மருமகளையும் தொல்லைப்படுத்தினாள். அவள் மாமியாரின் கொடுமைகளைத் தாங்க முடியாமல் தற்கொலை செய்து கொண்டு இறந்து போனாள். இரண்டாவது மகன் தன் மனைவி போன ஏக்கத்தில் உடல் மெலிந்து படுத்த படுக்கையாகி முடிவில் இறந்தும் போனாள்.

இதை எல்லாம் கண்ட மூன்றாம் மகன் தன் தாய்க்கு நல்ல பாடம் கற்பித்து அவளைத் திருத்த வேண்டும் எனத் தீர்மானித்துக் கொண்டான். அதற்கு அவன் ஒரு திட்டமும் போட்டான்.

அவன் அடுத்த ஊருக்குப் போய் அங்கு மரப் பொம்மைகள் செய்பவனிடம் ஐந்தடி உயரப் பெண் மரப் பொம்மை செய்து தரும்படிச் சொன்னான். அந்த பொம்மை தயாரானதும் அதை இரவில் எடுத்து வந்து தன் வீட்டிற்குப் பக்கத்து வீட்டில் ஒரு அறைக்குள் வைத்துப் பூட்டி விட்டான்.

-வி. லாவண்யா-

இரண்டு நாட்கள் கழித்துத் தன் தாயாரிடம் அவன் "அம்மா! நான் கல்யாணம் செய்து கொண்டு என் மனைவியையும் அழைத்து வந்து விட்டேன். அவள் இங்கே வரப் பயப்பட்டதால் அடுத்த வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொண்டு அங்கேயே அவளை இருக்கச் சொல்லி விட்டேன்" என்றான்.

அதைக்கேட்ட அவனது தாயார் தன் மனதில் "ஓகோ. இவன் தன் மனைவியை இங்கே விட்டு வைக்காமல் அடுத்த வீட்டிலா குடித்தனம் வைத்திருக்கிறான்! அவளை மட்டும் விட்டு வைப்பேனா? என்ன செய்கிறேன், பார்" என்று கருவிக் கொண்டாள்.

மறுநாள் தன் மகன் அடுத்த வீட்டைப் பூட்டிக் கொண்டு போவதை அவள் பார்த்தாள். சற்று நேரத்திற்குப் பின் அவள் ஒரு உலக்கையை எடுத்துத் தன் தலையில் அடித்து காயபபடுத்திக் கொண்டு "ஓ! இந்த அநியாயத்தைக் கேட்பார் இல்லையா? என் மருமகள் என்னை அடித்துவிட்டு அடுத்த வீட்டிற்குள் ஓடிவிட்டாளே" என்று கத்தினாள். அவளது கூச்சலைக் கேட்டுக் கூட்டம் கூடி விட்டது.

சிலர் அடுத்த வீட்டுக் கதவைத் உடைத்துக் கொண்டு உள்ளே சென்று பார்த்தனர். அங்கே ஐந் தடி உயர மரப் பொம்மைதான் இருந்தது. இதற்குள் மூன்றாவது மகனும் அங்கு வந்து விட்டான். அவன் சிரித்தவாறே "இதுதான் என் மனைவி. என் தாயாரின் மருமகள். பார்த்துக் கொண்டீர்களா?" என்றான்.

அதைக்கேட்டு ஊரார் சிரித்தனர். அவனது தாயாரோ அவமானத்தால் தலைகுனிந்து கொண்டாள். தன் மூன்றாவது மகன் உண்மையிலேயே ஒரு பெண்ணை மணந்து கொண்டு வந்தபோது அவளைக் கொடுமைப்படுத்தாமல் அன்புடன் நடத்தினாள்.





## வேக ஓட்ட நீர்யானை

ஒரு ஆற்றில் நீரின் கீழே அதிவேக மாக நீர்யானை ஓடக்கூடியது. நீரின் அடி மட்டத்தில் அது பத்து நிமிடங்கள் அமிழ்ந்து இருக்க முடியும்.

## மிகப் பெரிய பறக்கும் பிராணி



சுமார் பத்து லட்சம் ஆண்டுகளுக்கு முன் மிகப் பெரிய பறக்கும் பிராணி உயிர் வாழ்ந்ததாகத் தெரிய வந்துள்ளது. இதன் பெயர் ப்டெரோசெஸர் க்வெட் ஜால்கோட்தூபஸ் நார்த்ரோபி. இதன் உடலின் பாகங்கள் 1974ல் கண்டுபிடிக் கப்பட்டன. இதனுடைய இறக்கையின் நீளம் 50 அடி (15.24 மீ) இதன் நிறை 190 பவுண்டு (86.கி.கிராம்) இது டெக்ஸாசில் காணப்பட்டது.

## விஷமுள்ள பெரும் உயிரினம்

மாமிசமே உண்ணாத மிகப் பெரிய பிராணி வாத்து வாயைக் கொண்ட ப்ளாட் டிபஸ். இது ஆஸ்திரேலியா விலுள்ள விஷமுள்ள பிராணி.



## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 50

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1991 செப்டம்பர் மாத இதழில் வெளியிடப்படும்**



G. Srinivasamurthy



Anant Desai

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஜூலை 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும். ★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 50/—பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க் கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026

---

## மே மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : கூடி வாழ்வதில் இன்பம்

இரண்டாவது போட்டோ : தனித்து வாழ்வதில் துன்பம்

பரிசு பெற்றவர் : சிவராஜபால ராதா, வேலூர்-632 009

பரிசுத் தொகை ரூ. 50/-ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.

---


## அம்புலிமாமா

இந்தியாவில் ஆண்டு சந்தா ரூ. 48-00

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :

சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை-600026

Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

